

**ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே ஸ்திரதியமநகம்**
**ச்ரோத்ரியம் ப்ரஹ்ம நிஷ்ட்டம்**
**ஸத்வஸ்தம் ஸத்யவாசம் ஸமய நியதயா**
**ஸாது வ்ருத்த்யா ஸமேதம் !**
**டம்பாஸூயாதி முக்தம் ஜித விஷயி கணம்**
**தீர்க்க பந்தும் தயாளும்**
**ஸ்க்காலித்யே சாஸிதாரம் ஸ்வ பரஹித பரம்**
**தேசிகம் பூஷ்ணு ரீப்ஸேத் !!**

மேன்மையான நிலைக்கு வர விரும்புபவன் சிறந்த ஸம்ப்ரதாயத்தில் நிலைபெற்றவனாய், உறுதியான புத்தியுடையவனாய், குற்றமற்றவனாய், வேத வேதாந்தங்களை நன்கு கற்றவனாய், எம்பெருமானிடம் பக்தியுடையவனாய், ஸத்துவ குணத்தில் நிலையுடையவனாய், உண்மையே பேசுபவனாய், காலத்தைத் தழுவிய அல்லது தருமம் உணர்ந்தவரின் வரையறைக்கு உட்பட்ட சிறந்த ஒழுக்கத்துடன் கூடியவனாய், கர்வம் பொறாமை முதலியன அற்றவனாய், புலன்களை அடக்கியவனாய், நீண்ட உறவினனாய், கருணை உள்ளம் கொண்டவனாய், (சிஷ்யர்களுக்கு) தவறு நேருங்கால் தண்டிப்பவனாய், தனக்கும் பிறருக்கும் நன்மையை நாடுபவனான ஆசார்யனை அடைய விரும்ப வேண்டும்.

**—ஸ்ரீந்யாஸவிம்சதி—1 ஸ்ரீ தேசிகன்.**

ஜூலை 1989

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 | மலா 20
வருட சந்தா ரூ. 12 | இதழ் 2

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை. ஆனிவார ஆஸதானம — திருமலை

பின்னட்டை ஸ்ரீசுபரமண்ய சுவாமி — பழனி.

முதல் உள்அட்டையில ஆந்திர மாநிலம் எம்மிகனூரில் கட்டப படவிருககும் தி தி தே. கல்யாண மண்டபத்திற்கு ஆந்திர முதல்வா திரு என. டி. ராமாராவ அவர்கள அடிக்கல் நாட்டும போது

2-வது உளஅட்டையில் திருமலையில இநதியப பிரதமா திரு ராஜீவ காநதி அவாகள.

சிறப்பாசிரியா
திரு. சி.எச். வெங்கடபதிராஜு IAS, செயலாட்சித தலைவா, தி தி.தேவஸதானம், திருபபதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி, மேலாளர், தி தி. தேவஸ்தான அச்சகம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

சமயம் புகட்டும் உண்மைகளையே வாழ்க்கையின் இலக்கணங்களாக அமைத்து, அச்சமய உணர்வினை நம் அன்றாட வாழ்க்கையோடு பிணைத்திடும் வகையில பல கடவுளர்களின் பெயரில், பல விரதங்களின் பெயரில், பல திரு நாட்களின பெயரில் பல சமய விழாக்களை ஏற்படுத்தினர் நம் ஆன்றோர். இதனால், மனிதன் மகானாக மாறாவிட்டாலும், அடிப்படை மனிதப் பண்புகளை அவன இழக்காமல், அவற்றைத் தன்னுள் வளர்த்துக் கொண்டு தனக்கும சமுதாயத்திற் கும் அவன்தன் பிறவி பயன்பெறவே வழிவகுக்கப்பட்டது.

'பரஞானம்' எனப்படும் அப்பரம்பொருளின் தத்துவ உண்மைகளை அறிந்திடவோ, தன்னுள் அப்பரமனைக் கண்டிடவோ-வேத நற்கருத்துக்களை அறிந்து தெளிந்திடவோ, வேத காலந்தொட்டு 'குரு' எனும் பாத்திரம் வாழ்க்கை யில முக்கிய பங்கேற்றுள்ளது. ஒவ்வொரு சமயமும் தனக்கென்ற ஒரு குரு பரம்பரையினைக் கொண்டுள்ளதே அக்குரு வின் அவசியத்தை எடுத்துக்கூறும். அப்பரம்பொருளான மாயவனே சாந்தீபினியை குருவாகக் கொண்டதும, ஆடலரசன் ஆறுமுகனின் அடி பணிந்து ஓங்காரத்தின் அரும்பொருள் அறிந்த காட்சியும் 'குரு'வின் பெருமையைப் பேசும். மனிதப் பிறவியின மாண்பினை அறிந்தே, இப்பிறவியில்தான் அப்பிறப்பற்றவனின பெருமையினை அறிந்திடவே, தொடரும் பிறவித் துயரினை விடுத்து அப்பரந்தாமனின அடி சேர்ந்திடவே ஞானிகளும், முனிவர்களும், இறையடியார்களும் பல நிலை களில், பல உருவங்களில் 'குரு'வுக்கு ஏற்றம அளித்தனர். சமய பேதங்கடந்து இந்துக்கள் யாவரும் அக'குரு'வினை வழி படும் வகையில் 'குரு பூர்ணிமை' என்றும் 'வியாஸ பூர்ணிமை' என்றும ஒரு சமய நிகழ்ச்சியினை நம்மிடையே ஏற்படுத்தி யுள்ளனா

பரம்பொருள தன் தண்ணருளினைப் பல ஞானிகள், ஆசாரியர்கள் மூலம் வழங்குகின்றான் என்பதையும், மனிதனின் ஆன்ம உயர்வுக்காக வேதங்களைத் தொகுத்தும், உத்திரமீமாம்சை, மகாபாரதம், பிரம்ம சூத்திரங்கள், 18 புராணங்கள ஆகியவற்றை எழுதியும் இந்துக்களின முதல் குருவாக விளங்கிய வியாஸ பகவானுக்கு மானிடம தன் நன்றியைத் தெரிவித்தல் வேண்டும் என்பதையும் குறிக்கும் வகையில் ''ரிஷிகளிலே நான் வியாஸராக'' இருக்கிறேன் என்ற கண்ணனின் கீதை வாக்கு விளங்குகிறது. மும்மூர்த்திகளின் மொத்த உருவமாகவும், பரப்பிரம்மத்தின் மறு உருவமாகவும் குரு விளங்குகின்றார். ''ஸ்ரீ குரு: ஸர்வ காரண பூதா சக்தி:'' என்று பாவனோபநிஷத் அறிவுறுத்தியபடி 'குரு'வே நம்முள் ஆன்ம சக்தியினைத் தோற்றுவித்து, இறை ஒளியினை ஏற்றிடும் ஞானச் சுடராக விளங்குகிறார்.

''குகாரஸ்ச அந்தகார: ஸ்யாத் ருகாரஸ தந்நிரோதக: அந்தகார நிரோதித்வாத் குரு ரித்ய பிதியதே'' என்ற வாறு அறியாமை எனும் இருளினைப் போக்கிடும் ஞானப் பேரொளியாக குரு ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் திகழ்கின்றார். 'ஞானம் இவனெறி நண்ணியிடும்' எனும் உமாபதியாரின் வாக்கும், மூன்று தத்துவ உண்மைகளை சமய உலகிற்குத் தந்திட்ட சங்கரரும், உடையவரும், மதவரும தங்கள் வாழ்க்கையில் தங்களுக்கென்று ஆசாரியார்களை ஏற்படுத்திக் கொண்ட செய்தியும், ஞானம எனும் பேரறிவினை 'குரு'விடமிருந்தே ஒருவன் பெற்றிட முடியும என்ற உண்மையைக் கூறிடும்.

''ஆசானருளின்றி அமையாதொரு நாளும்'' ''தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும வராது'' ''தாரமும் குருவும் தலைவிதிப்படியே'' எனும் முதுமொழிகள் குருவின முக்கியத்துவத்தையும், அவர்தம் பெருமையினை யும் பேசிடும். இத்தகு 'குரு'வின் இன்றைய நிலை என்ன? அவர்தம் சமுதாயப் பங்கென்ன? தகுந்த 'குரு'வினை அடைய வேண்டிய இன்றைய மாணவர்களின் முயற்சிகள யாவை? குருவுக்கும் சிஷ்யனுக்கும் தேவையான பண்புக கூறுகள் அவர்களிடையே நிலவுகின்றனவா? எனும ஐய வினாக்களுக்கு சாதகமான பதில்கள் கிடைத்திடின நாம் கொடுத்து வைத்த தவர்களதாம்: ஆனால உண்மை கசக்கின்றதே'

'பற்றுக பற்றற்றான பற்றினை, அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு' என்று துறவறத்தின பெருமை பேசும போது, ஒரு 'குரு'வின முக்கியத்துவத்தைக குறிப்பிடுகின்றான வள்ளுவன். இன்றைய ஆசிரியா மக்களிடையே 'அப பற்றற்ற நிலை' எத்தனைப் பேரிடம உள்ளது? இதனால ஆசிரியர்கள உறவு துறந்து, வீடு மறந்து, ஊண விடுத்துச் செயலபட வேண்டும என்று எண்ணுவது மிகவும நகைப்புக்குரியது நேர்மையை மறந்து, உழைப்பைத்துறந்து, வரவு எதிா பார்த்து, வெறுமைப் பாராட்டிக் கறபிக்கும தொழிலை மேற்கொளவது எதிர்கால சந்ததியினரைத தவறான பாதைக்கு இட்டுச் செல்லும் என்பதே பெற வேண்டிய செய்தியாகும். ஆசிரியர் தொழில் என்பது காலை 10 மணி முதல மாலை 5 மணி வரை முடிந்துவிடும் ஒரு கடமையல்ல. அறிவுக்கு உறக்கம இல்லை. அறிவுப் பசியினைத் தீர்த்திடும ஒரு முழு நேர 'தாயா'வார் ஆசிரியா. தட்டுமுன்பே திறக்கப்பட வேண்டிய அறிவுக் கூடங்கள ஆசிரியர்கள. கறகும மாணவர்களுக்கும், கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும் இடம,இனம, காலம என்பன தடுப்புச சுவர்களல்ல. குருவினிடம் பயலும் மாணவர்களுக்குப பணிவு, மதிப்பு, உண்மை ஊழியம், உண்மை அவா எனும் பண்புகள் அமைந்தால் ஆசிரியர்-மாணவர் உறவு மேம்படும்; சமுதாயத்திற்குப் பயன்படும்.

ஆகவே 'சத்குரு கொடுப்பதை ஈசனும கொடான்' என்பதை மனதிற் கொண்டு, ஆசிரியர் சமூகம்-மாணவ சமுதாயம்-பெற்றோர் என்ற சமுதாயத்தில முக்கியப பங்கு பெறும் இம்மூவரும் ஒன்றுபட்டு, ஒருவர் பிரச்சனையை மற்றவர் தீர்த்திடும் வகையில் உண்மை உணர்வோடு செயல்பட்டால், 'குரு பூர்ணிமை' எனும் சமய மற்றும் சமுதாய நிகழ்ச்சிக்கு பொருளுண்டு; அந்நிகழ்ச்சியினை அன்றே ஆரம்பித்து வைத்த நம் ஆன்றோர்க்கும் சிறப்புண்டு என்பதை அறிவோமாக!

# செய்திச் சுருக்கம்

திருப்பதியிலிருந்து சித்தூர் சாலையில் சுமார் 6 கி.மீ. தொலைவிலுள்ள ஸ்ரீநிவாசாமங்காபுரத்திலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோவிலின் இவ்வருட ஸாக்ஷாத்கார வைபவம் 7—7—89 முதல் மூன்றுநாட்களுக்கு வெகு சிறப்பாக நடைபெறும். இந நாட்களின் போது உதசவர் தங்க திருச்சி, ஹனுமநத கருட வாகனங்களில் திருவீதி திருவலம் மேறகொள ளுவார். இந்நாட்களின் மதியங்களில் கோவிலில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.

ஃ ஃ ஃ

திருமலை 'ஹில் வ்யூ' காட்டேஜ் அருகில் ரூ. 4.5 இலட்சம் செலவில கட்டப்படவிருககும் 'தந்தியிலலா தொடர்பு' நிலையத்திற்கு ஆந்திர மாநில வனத்துறை அமைச்சர் திரு. கே. சுரேந்திர ரெட்டி அவர்கள் 10—6—89 அன்று அடிககல் நாட்டினர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சியின் போது தி.தி. தேவஸ்தான வனத்துறை தலைமைப் பொறுப்பாளர் திரு. ஜானகிராம நாயுடு மற்றும் தி. தி. தே. உயர் அலுவலர்களும் கலநது கொண்டனர்.

ஃ ஃ ஃ

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து நாள்தோறும் திருமலைக கோயிலுக்கு நன்கொடையாக வழங்கும் தொகையினை வங்கி மற்றும அஞ்சல் மூலமாக செலுத்தி வருகின்றனர். இவ்வாறு தொகை செலுத்திடும் நபர்களுக்கு மேலும உதவிடும வகையிலும், வங்கி மற்றும் அஞ்சல் அலுவலகம் இல்லாத பகுதிகளில் இருக்கும் மக்களுக்கு உதவிடும் வகையிலும் தி. தி. தேவஸ்தானம் தபால்துறையினரின் உதவியுடன் நாட்டின் எல்லா தபால் நிலையங்களிலும் கிடைத்திடும் வகையில் அஞ்சலுக்குதவாத ரூ. 25/- மதிப்புள்ள தபால்தலைகளை விற்க மேலாணமை முடிவு செய்துள்ளது. இதனுல் தி. தி. தே. கோயிலுக்கு நன்கொடை அளிகக நினைப்பவர்கள் தாங்கள் அனுப்ப நினைக்கும் தொகைக்கான தபால்தலைகளை வாஙகிடின் அஞ்சலலுவலகங்களில் வசூலிக்கப்படும் அத்தொகை தி. தி. தே. கணக்கில் சேர்க்கப்படும்.

ஃ ஃ ஃ

தி. தி. தே. பொறுப்பாணமைக் குழு உறுப்பினர் திரு. லக்ஷ்மி நாராயணு அவர்கள் ரூ. 16,000 பெறுமான 200 கி.கி. எடையுள்ள எவர் சில்வர் தட்டு ஒன்றினை திருமலைக் கோயிலுக்குப் பரிசாக அளித்துள்ளார். இத்தட்டு திருமலைக் கோயிலில ஒவ்வொரு வியாழக்கிழமை தோறும் நடைபெறும் திருப்பாவாடை நிகழ்ச்சிக்குப் பயன்படுத்தப்படும்.

ஃ ஃ ஃ

## திருமலையில் பிரதமர்

15—6—89 அன்று இந்தியப் பிரதமர் திரு. ராஜீவ் காந்தி அவர்கள் திருமலைககு வருகை புரிந்தார். தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு, இணை செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ் குமார், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. தேவநாதன், லக்ஷ்மிநாராயணு மற்றும் தி. தி. தே. உயர் அலுவலர்களும், பிரதமரை கோயில்முன் கோவில் மரியாதைகளுடன் வரவேற்றனர். கோயில பிரதம அர்ச்சகரால் பிரதமருக்கு சேஷ வஸ்த்ரம் அணிவிக்கப்பட்டது. தரிசனத்திற்குப் பிறகு பிரதமா உண்டியலில் காணிக்கை செலுத்தினுர். பின்னர் பிரதமருக்கு அன்னமய்யா பாடல்கள் கொண்ட ஒலி நாடாக்களும், சமய நூல்களும், கோயில் பிரஸாதங்களும் வழங்கப்பட்டன. பிரதமருடன் ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. குமுத்பென் ஜோஷி, ஆந்திர மாநில தகவல்துறை அமைச்சர் திரு. விவேகானந்தா, ஆநதிரமாநில காங்கிரஸ்கட்சித் தலைவர் திரு. எம். சென்னுரெட்டி மற்றும் திரு. பி. சிவசங்கர், திரு. பஜன் லால், பி. சங்கரானந்த் போன்ற மத்திய அரசியல் பிரமுகர்களும் உடன் வந்திருந்தனர்.



தி. தி. தே. சமய நூல்களை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் பிரதமருக்கு வழங்குகிறுர்.



# மாலவன் புகழ் பாடிய மன்னவன்

உலக மொழிகளனைத்திலும் சீரும் சிறப்பும் பெற்று இலக்கண இலக்கியங்களோடு திகழும் தொன்மையான மொழி நம்தம் தமிழ் மொழி. இதனை அமிழ்திற் சிறந்த தமிழ்மொழி என்பர் ஆன்றோர். 'நானிலத்தோர் தாம் வேண்டும் கூடற்றமிழ்' எனபர் சங்ககாலச் சான்றோர். தமிழ்த் தலைவன என்று போற்றப்படும் பூதத்தாழ்வார் 'ஞானத்தமிழ்' என நவில்வர். 'பாலேய் தமிழ்' எனப் பகர்வர் பாமாறன். 'புல்லாணித் தென்னன் தமிழை அவ்வடமொழியை' என்று தமிழே திருமால், திருமாலே தமிழ் எனப் பரவுவர் திருமங்கை ஆழ்வார். 'செவ்விய மதுரஞ் சேர்ந்த சீரிய கூறிய நற்றீஞ்சொல்' என்பர் கம்பர் பெருமான். 'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்' எனப் பாராட்டுவர் பாரதியார். இவ்வாறு ஈடு இணையற்று வளமுற்று நலமுற்ற உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழியிற்றோன்றி அரிய பெரிய கருத்தமைந்த கருவூலமே ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்வியப் பிரபந்தமாகும்.

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழை வளர்த்தவர்கள் சேர, சோழ, பாண்டியர்கள் என்னும் மூவேந்தர்கள். இந்த முப்பெரும் வேந்தர்களும், திருமாலை வாழ்த்தி வணங்கி வந்தார்கள். முடிமன்னர் மூவரும் காத்தற்றொழிலைக் குறிக்கோளாகக் கொண்ட காவலர்களாகையாலே, அவர்கள் காப்புக் கடவுளாகிய திருமாலுக்கு வழிபாடு நிகழ்த்தி வந்ததில் வியப்பில்லையல்லவா? படியளக்கும் பரந்தாமனுக்குப் படிகாக்கும் மன்னவர்கள் கோயில் எழுப்பி விழாவெடுத்துப் பக்தி மார்க்கத்தைப் பரப்பிவந்தார்கள். அந்த வகையில் தான் கோட்டை காவலுடன் கூடிய கோயில்களாகச் சேரநாட்டில் அனந்த பத்மநாபசுவாமி ஆலயமும், பாண்டிய நாட்டில் அழகர் திருக்கோயிலும், சோழ நாட்டில் திருவரங்கப்பெருமான் பெரியதிருக்கோயிலும் ஓங்கி உலகளந்த உத்தமனின் திவ்விய திருத்தலங்களாகத் திகழ்கின்றன. முப்பெரும் வேந்தர்கள், செங்கனிவாய்ச் செந்தாமரைக் கண்ணனுக்குக் கற்கோயில்களையும், கலைக்கோயில்களையும் நிறுவியதோடு அமையவில்லை. ஆழ்வார்கள் இயற்றியருளிய காவியக் கோயில்களையுமல்லவா படைத்திருக்கிறார்கள்! அந்தக் கலைக்கோயில்களிலும், காவியக்கோயில்களிலும் பரவசமாகி எம்பெருமான் என்றென்றும் கொலுவிற்றிருக்கிறான். பரந்தாமன், பைந்தமிழுக்குப் பின்னால் பைத்தியமாகிச் செல்லும் இயல்பினனன்றோ? கோதை நாச்சியார் சூடிக்கொடுத்த பூமாலையிலும், பாடிக்கொடுத்த பாமாலையிலும், கொண்டல் வண்ணன் உள்ளம் பறிகொடுத்து மயங்கித் திரிகிறான். அவன் அலையிற்றுயின்றாலும் மலையிலுறைந்தாலும், இலையிற்கிடந்தாலும் ஆழ்வார்களின அமுதத் தமிழ் மறையின் வலையில்தான் சிக்குண்டுக் கிடக்கிறான்.

செந்தமிழில் ஆரணம் தந்தருளும் மாறன் இல்லையேல் வடமொழி வேதத்தின் ஆழ்பொருளை — அரும்பொருளை யாரே அறிவார்? இந்தப் பூமியில் அர்ச்சாவதாரமாகக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் அமலனுக்குத்தான் மகிமை ஏது? அவ்வச்சதனுக்குத்தான் உத்ஸவங்கள் இவ்வளவு சிறப்பாக நடக்குமா? அவ்வெம்பெருமான் அழகை எல்லாம் யார் பாராட்டுவார்? இதை உணர்ந்தன்றோ கவிசக்கரவர்த்தி கம்பரும்,

"அந்தமிலா மறையா யிரத்தாழ்ந்த
வரும் பொருளை
செந்தமிழாகத் திருத்திலனேல்
நிலத் தேவர்களும்
தம் தம் விழாவும் அழகும் என்னுந்
தமிழார் கவியின்
பந்தம் விழா வொழுகும் குருகூர்
வந்த பண்ணவனே!"

என்று கூறினர். திருமால் திருக்கோயில்களில் திவ்வியப் பிரபந்தம் இல்லாத திருவிழா ஏது? இவ்வாறு அமுதத் தமிழில் அவதரித்ததே நாலாயிர திவ்வியப் பிரபந்தம்.

அலங்காரம் ஆர் தேவராஜய்யங்கார்
ஸ்ரீவில்லிபுத்தூர்.

நாலாயிர திவ்யப் பிரபந்தம் ஒரு தொகை நூல். ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் இந்நூல் அருளிச் செய்யப்பெற்றது இந்நூலை அருளிச் செயலமுதம் எனப் போற்றுவர் வைணவர். அத்தமிழில் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்களில் அரசர் குலத்திற்கோர் அணிவிளக்காய் அவதரித்தவர் குலசேகர ஆழ்வார்.

சேரநாட்டரசன் த்ருடவிரதன். நீண்ட நாட்களாக அவனுக்குக் குழந்தை இல்லை. மக்கட் செல்வம் வேண்டி அவன் மலர்மகள் நாதனைப் பூசித்தான். அச்சுதன் அருளால் அரச தம்பதியருக்கு அழகிய மகன் ஒருவன் பிறந்தான். அரசனும் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தான். குலம் விளங்க வந்த குமாரனுக்கு அரசன், குலசேகரன் என்று பெயர் சூட்டினான். குலசேகரனும் வளர்மதியென வளர்ந்து நல்லாசிரியனையடுத்து சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்து முழுமதியெனப் பொலிவுற்றான் இளவரசன் வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லவனானான்.

இளமையும் எழிலும் கொண்ட குலசேகரன் தன் வீரத்தைக் காட்ட விழைந்தான். மைந்தனது எண்ணத்தைக் கண்ட மன்னன், அவனுக்கு முடிசூட்டி மகிழ்ந்தான். குலசேகரனும், மலைவளமும் கலைவளமும் நிலை பெற்ற மலையாள நாட்டுக்கு அதிபதியானான். அரச பாரத்தை மகனிடம் ஒப்புவித்துவிட்டு, த்ருட விரதன் உயர் கதியடைய தவவனம் சென்றான்.

சேரர் குல திலகமான இவர், முடிசூடி அரசாண்ட காலத்தில் மாற்றரசர்களாகிய சோழ பாண்டியர் என்ற மன்னர்களை வென்று, 'மண்ணுலகச் செல்வங்களை ஆண்டீர்கள், இனி நீவிர் விண்ணுலகம் சென்று தேவ மாதர்களுடன் களித்திருங்கள்' என்று அவர்களை வீர சுவர்க்கத்திற்கு அனுப்பி விட்டு சேர, சோழ, பாண்டி என்ற தமிழ்நாடு மூன்றுக்கும் தலைமை பூண்டு தனிப்பேரரசரானார். இதனை, 'கொல்லி காவலன் கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன்' என்ற இவரது வாக்கால் அறியலாம்.

மாலவன் புகழ் பாடிய மன்னவனாகிய குலசேகராழ்வார்,

'' மாவினை வாய்பிளந் துகந்த மாலை
வேலை
வண்ணனை யென்கண்ணனை
வன்குன்ற மேந்தி
ஆவினை அன்றுயக் கொண்ட
ஆயரேற்றை
அமரர்கள் தந்தலைவனை
அந்தமிழின் இன்பப்
பாவினை அவ்வட மொழியைப்
பற்றற்றார்கள்
பயிலரங்கத் தரவணையில் பள்ளி
கொள்ளும்
கோவினை, நாவுற வழுத்தி என்றன்
கைகள்
கொய்ம்மலர் தூய்என்று கொலோ
கூப்புநாளே! ''

என்ற பாசுரத்தில் அழகிய தமிழின் இன்ப மயமான பாடலே திருமால் என்றன்றோ உரைக்கின்றார்? என்னே! ஆழ்வாரின் தமிழ்ப்பற்று?

இவர் நீல நிறத்து நெடுந்தகையான மாலினிடத்து மாறாத பக்தி பூண்டவர். பங்கயக் கண்ணனின் பரம கல்யாண குணக்கடலில் படிந்து பரமானந்தமடைவர். '' கற்பார் இராமபிரானை அல்லால் மற்றுங் கற்பரோ? '' என்றவாறு இவர் இராமாயணத்தைக் கற்கத் தொடங்கினார். கருத்திலும் அகத்தியத்தை நிறுத்தச் செய்தார். தினமும் தன் அரண்மனையில் இராமாயணச் சொற்பொழிவு நிகழ்த்தச் செய்து அதில் ஊறித்திளைப்பார். அதுவே இவரது வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது.

இவர் திருமாலின் மெல்லடியார்களிடத்தில் தீராத காதல் கொண்டு தினமும் அவர்களை நேசித்துப் பூசிப்பார். அடியார்களின் பெருமையைக் கூறுமிடத்து, '' தன்னடியார் திறத்து தாமரையாளாகிலும் சிதகுரைக்கு மேல், என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் '' என்றன்றோ செந்தாமரைக் கண்ணனாகிய செல்வத் திருமாலும் தன் செம்பவள வாய்திறந்து கூறுகிறான். இவ்வுண்மையை உணர்ந்த கொற்றவனாகிய குலசேகராழ்வார், நாத்தழும்பேற நாராயணா என்று நாள்தோறும் நவிலும் அடியார் திறத்து அன்புடையவராய்,

'' அல்லிமா மலர்மங்கை நாதன்
அரங்கன் மெய்யடியார்கள் தம
எல்லையில் அடிமைத்திறத்தினில்
என்றும் மேவுமனத்தனாம்
கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக்கோன் குலசேகரன்
சொல்லின் இன்தமிழ் மாலைவல்லார்
தொண்டர் தொண்டர்களாவரே ''

என்று சுந்தமினிய செந்தமிழிலும்,

'' மத்ஜந்மந: பலமிதம மதுகைட பாரே
மதப்ரார்த்தநீய மதநுக்ரஹ ஏஷ ஏவ
தவத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக
ப்ருத்ய ப்ருத்ய
ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதிமாம்
ஸ்மர லோகநாத ''

என்ற வடமொழி ச்லோகமாகிய முகுந்தமாலையிலும் இவரே தெளிவுபடக் கூறுவதனால் அடியார்களிடத்தில் இவருக்குள்ள பக்தி விளங்கும்.

அரசன் அடியார்களுடன் கூடி, ஆடியாடி அகங்கரைந்து இசை பாடிப்பாடி கண்ணீர் மல்கி எங்குமும் மாலின் புகழில் மயங்கிக் கிடப்பர். இவரது அரண்மனை எங்கும் அடியார்களின் கூட்டம் நாளுக்கு நாள் அதிகரித்தது.

அரசனின் இச்செயலைக் கண்டு அமைச்சர்கள் ஆத்திரமடைந்தனர். பகவத் பாகவதர்களிடத்தில் பாராளும் மன்னவன் காட்டும் பரிவைக் கண்டு அவர்கள் பொறாமை கொண்டனர். மன்னனின் இச்செயலை மந்திரிகள் மாற்றக் கருதினர். மன்ன

னுக்குச் சொந்தமான மணிகளி ழைத்த ஆபரணமொன்றை மறைத்து விட்டு அவர்கள் பக்தர்கள் மேல் பழி போட்டனர். இவ்வாறு செய்தால் அரசன் பாகவதர்களை வெறுத்து ஒதுக்கி விடுவார் என்பது அமைச்சர் களின் கருத்து.

குறிப்பறிவதில் தேர்ந்தவராகிய குலசேகரர், மந்திரிகளின் சொல்லை நம்பவில்லை. அடியார்களிடம் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்ட அரசன், 'திருமாலடியார் கள் ஒரு போதும் இத் தீயசெயலைச் செய்யார்கள். கனவிலுங்கூட இக கடுஞ் செயலைக் கருதார். இதில் ஏதோ சூதிருக்கிறது. உத்தமர் களாகிய பந்தர்களின் பெருமையை உலகோர் அறியக் காட்ட வேண்டும்' என்று நினைத்தார்.

திருமாலடியாரிடம் பெருமால் கொண்ட மன்னர் மன்னன், கொடிய விடப்பாம்பு ஒன்றைக் குடத்தில டைத்து அரச சபைக்குக் கொண்டுவரச் செய்தார. 'பரம பக்தர்களாகிய பாக வதர்கள் இநதக் களவைச் செய்திருந் தார்களாகில் குடததினுள் இருக்கும் படங்கொண்ட பாம்பு என்னைத் தீண் டட்டும்' என்று அக்குடத்தினுள்ளே கையை விட்டுப்பையுடை நாகத்தைப் பற்றி எடுத்தார். அரச னது இச்செயலைக் கண்டு அமைச்சர் கள் அஞ்சி நடுங்கினர். ஆராயாது தாங்கள் மறைத்த ஆபரணத்தை அரசனடிகளில் வைத்து வணங்கினா. சோதி சோ மகுடமணிந்த ஆதி நார ணர் அடியர் திறத்து சேரர்கோன் செய்த இந்நீதியைப் பற்றிய செய் தியை,

"ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளார்
என்றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற
கையிட்டவன மாறறலரை
வீரங்கெடுத்த செங்கோல் கொல்லி
காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர்
சிகாமணியே!"

## மூவகைத் தியானம் (சாதனை)

1. மச்ச சாதனை :

மச்சம் எனபது மீன். அது நீரில் உள்ள வரையில் அது நிம்மதி யாக இருக்கும். பிறருடைய தொந்தரவுகளைத் தவிர்த்துவிடும். அதைப் போலச் சில துறவிகள் காட்டில் இருப்பார்கள். அங்கே அமைதியாகத் தியானம் செய்வார்கள். பிறர் அவர்களைத் தொந்தரவு செய்ய முடியாது.

2. மிருக சாதனை :

மிருகம் என்பது தரையில் உலாவுவது. தரையில் பல இடங் களுக்கு அது செல்லும். பலவிதமான சூழ்நிலைகளைச் சந்திக்கும். ஆனால் அதனால் சில இடங்களுக்குப் போக முடியாது. தண்ணீருக்குள செல்ல முடியாது. வானத்தில் பறக்க முடியாது. இதைப்போல சாதனை செய்யக் கூடிய துறவிகள் தேசத்தில் அமைதியான இடத்தில் வாசம் செய்து கொண்டு அந்தச் சூழ்நிலையில் மட்டும் தியானம் செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள்.

3. கூர்ம சாதனை :

கூர்மம் என்பது ஆமையைக குறிப்பது. ஆமை தரையிலும் வாழும். தண்ணீருக்குள்ளும் செல்லும். தனது ஓட்டுக்குள் பத்திரமாகச் சுருங்கிக் கொள்ளும். சூழ்நிலை எப்படி இருந்தாலும் அது தனது அமைதி யைத் தேடிக் கொள்ளும். மிக உயர்ந்த பக்குவம் பெற்ற துறவிகள், சூழ்நிலை எப்படி இருந்தாலும் மனத்தை நிலைநிறுததித் தியானத்தில் ஈடு படக்கூடியவர்கள். தனியாக இருந்தாலும் கூட்டததில் இருந்தாலும் அவர்களால் அமைதியாக ஒதுங்க முடியும்.

—பகவான் ஸ்ரீ ஸத்யசாயிபாபா.

—- திருமதி. கமலா மாரியப்பன்-கோயமுத்தூர்.

என்ற பெருமாள் திருமொழித் தனி யனால் அறியககிடக்கிறது.

உண்டியே உடையே என்றலையும் இவ்வுலகில் உணணும் சோறும் தின் னும் சோறும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்றெண்ணும் இம்மன் னர் குலமாணிக்கம் அமைச்சர்களின் இசெயலுக்குப் பின் அரசியலுக்கே ஒரு முழுக்குப் போட்டு விட்டார். அரச பதவியில் இருக்க இசையாத இவர், திருவாழ் மார்பனாகிய திரு வேஙகடவனிடம் சிந்தை செல்லப் பெற்றவராய், 'கம்பமத யானை கழுத் தகத்தின் மேலிருந்து இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண் டேன் எம்பெருமானே!'

"ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும மண்ணரசும்
யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத திருவேங்கடச்
சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன்
ஆவேனே"

என்று திருமலை எம்பெருமானை வேண் டினார.

அரசியலை வெறுதத அரசர் பெரு மான் அரும்பெறல் செலவனாகிய தன் குமாரனுக்கு முடிசூட்டினார். மல்லி நாடாணட மட மயிலைப்போல் கொல்லி காவலனாகிய இவருக்கு ஒரு குமார்த்தி உணடு. இவள், திருமா லின் தேவிமார் மூவரில் நீளாதேவி யின் அம்சமாகப் பிறந்தவள். சேர குல வல்லி என்ற இவள், தந்தை யைப் போல் திருவரங்கனிடம் தீராத காதல் கொண்டவள், அழகிய மண

வாளனே தனக்குரிய மணவாளன் என்ற கருத்துடையவள். கொங்கர் கோன் குலசேகரன் குமாரத்தியான இவள் திருவரங்கனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்து அவனது கோலமா மணியாரமும், முத்துத்தாமமும், முடி வில்லதோர் எழில் நீலமேனியும் காண ஆசைகொண்டாள். அவளது ஆசையைக் கண்ட அரசன் அகம் மகிழ்ந்தார். குமாரத்தியின் ஆசையை நிறைவேற்றக் கருதிய குல சேகரர் அவளை அழைத்துக் கொண்டு, பணியரங்கபபெறும் பாயற் பரஞ் சுடரைக் காண, அணியரங்கத் திரு நகர் வந்தடைந்தார்.

"இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி யணிபணம் ஆயிரங் களார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்த னென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை யணையை மேவி,
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு என
கண்ணிணைகள் என்று கொலே களிக்கும் நாளே."

என்ற ஆழ்வாரின் கனவு நனவாகியது.

அழகிய மணவாளன் சந்நிதிக்குத் தன் திருக்குமார்த்தியை அழைத்து வந்தார். சேரகுல வல்லியும் அழகிய மணவாளனைக் கண்ணுரக் கண்டு அவனது 'கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப் பெரியவாய' கண்களின் அழகில்சிக்கிச் சொக்கித் துவண்டு மயங்கி நின்றாள். அவள் நிலையைக் கண்ட ஆழ்வார், அவளை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று அரங்கனைப்பிரார்த்தித்தார். அவரது வேண்டுகோளை ஏற்ற ஆரா வமுதனாகிய அரங்கனும், சேரகுல வல்லியின் சீரார் வளையொலிக்கும் செந்தாமரைக் கையைப் பற்றி அவளைத் தனக்குரியவளாக்கிக் கொண்டான் அரங்கன். 'ஒரு மகள் தன்னை யுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங் கண்மால்தான் கொண்டு போனான்' என்று சொன்ன வேதியர் கோனைப் போல வில்லவர் கோனும் அரங்கனுக்கு மாமனார் ஆனார்.

ஆழ்வார்கள் சேர, சோழ, பாண்டிய நாட்டிலே அவதரித்தார்கள். அவர்களைப் போலவே திருமகள் பூமி நீளை என்ற திருமாலின் தேவிமார் மூவரும் முறையே சோழ நாட்டின் உறையூரிலே கமலவல்லி நாச்சியாராகவும், பாண்டிய நாட்டிலே பட்டர் பிரான திருமகளான சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாகவும், சேரநாட்டில் குலசேகரன் குலவிளக்கான சேர குலவல்லியாகவும் தோன்றி தமிழ் வடிவான—தமிழ்ப் பாவின் வடிவான திருவரங்கச் செல்வனையன்றோ சேர்ந் தார்கள்?

மாலவன் புகழ் பாடிய மன்னவனாகிய குலசேகராழ்வார், திருமாலிடத்துப் பெருமால் கொண்டு பெருமாள் திருமொழி என்ற அந்தமிகு செந்தமிழ் மாலையைச் செய்தருளினார். முகுந்தமாலை என்ற வடமொழி நூலும் இவர் இயற்றினார். இவர் வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லவர். பக்திக் கனல் பரக்க இவர் பாடிய,

"க்ருஷ்ண த்வதீய பதபங்கஜ பஞ்சராந்த
மத்யைவமே விசதுமானஸராஜஹம்ஸ:
ப்ராணப்ரயாண சமயே
கப வாதபித்தை:
கண்டா வரோதந விதௌ
ஸ்மரணம் குதஸ்தே."

'ஹே கிருஷ்ணா! உயிர் உடலைவிட்டு நீங்கும் பொழுது கபம், வாதம், பித்தம் முதலியவைகள் என் கழுத்தை அடைக்கும் பொழுது உன் நினைவு எப்படி உண்டாகும்? ஆகையால் என் மனமாகிய இராஜஹம்ஸம் இன்றே உன் திருவடிகளாகிற கூட்டினுள் நுழைந்து விடட்டும்' என்ற முகுந்த மாலை ஸ்லோகம் ஒன்றே இவரது வடமொழிப் புலமையை உணர்த்தும்.

இனி, தென்மொழியாம், தொன் மொழியாகிய தெய்வத் தமிழில் இவர் குவிக்கும் கவிப்பாவமுதம், கேட்பவர் செவிப்பால் நுழைந்து உள்ளத்தினுள்ளே நின்று தித்திக்கும் படியாக இருக்கும். திருவேங்கடத் தெம்பெருமானை இவர்,

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"

'ஈசனே! திருமலைவாசனே! நீசனேனிடம் பாசம் வைத்து உன் கோயிலில் அடியார் மிதித்தேறும் படியாய்க் கிடந்து உன் பவளவாய் காணும் பேறு தந்தருள்வாய்' என்று பழகு தமிழில் பாடிப் பரவசமடைவர்.

இவரது பாசுரத்தில் கருத்தாழமும் உவமை நயமும் மலிந்து குவிந்து கிடக்கும். வித்துவக்கோடு என்ற திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும எம்பெருமானைப் பாடும் பதிகம் முழுவதிலும் உவமை நயம் கற்பார் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்.

"தருதுயரம் தடாயேல உன் சரணலலால் சரணில்லை
விரைகுழுவும மலாப்பொழில சூழ்வித்துவககோட்டம்மானே
அரிசினத்தால ஈனறதாய் அகறறிடினும் மற்றவள் தன்
அருள்நினைந்தே அழுங்குழவி அதுவே போன்றிருந்தேனே"

'தாய் ஒருத்தி கடுங்கோபத்தோடு தன் சேயை அடித்து உதைத்துத்

(41-ம் பக்கம் பார்க்க)

# துயர் துடைக்கும் தோத்தாத்ரிநாதன்

'சீரிவரமஙகலநகர்' எனபபடும வானமாமலை திவ்யதேசம் (தானுகத தோனறிய) ஸவயம வ்யக்த ஸதலங களில் முககியமானது. வானமாமலை பெருமாளின் அருளை வேணடி நமமாழ வார் திருவாய் மொழியில் அமுதம போன்ற 11 பாசுரஙகள மூலம சரணம புகுகிறுர்.

"நோறற நோனபிலன் நுணணறி வீலேனு
கிலுமினி யுனனைவிட்டு, ஒன்றும
ஆற்ற கின்றிலேன் அரவினணை யமமானே
சேறறுத தாமரை செநநெனூ டுமலர்
சிரிவர மஙகல நகா
வீற்றிருநத எநதாய்! உனக்கு மிகையல்லே னஙகே"

எனறு அரவணையானே நான உனககு அதிக பாரமா? என்று வினவுகிறுர். இங்கே தெய்வநாயகப் பெருமாள உற்சவ மூர்த்தியாக எழுநதருளியுள ளாா.

திரு. சோ. ரங்கசுவாமி.
நாட்டரசன கோட்டை

இத்தலத்தில திருச்சிரிவரமங்கை என்ற திருநாமத்துடன தாயார் அருள பாலித்து வருகிறுர். பகதர் கள் கோரும் வரங்களை 'இல்லை' என்று சொல்லத் தெரியாத கருணையே வடிவமானவள்.

இந்த தாயாரைபபறறி சிறபபான வரலாறு உணடு. தாயாரின உற்சவ மூர்த்தி முதலில் திருப்பதியிலதான் இருந்ததாம். அங்குள்ளவர்கள திரு வேங்கட பெருமாளுக்கு ஸ்ரீவர மங்கா தேவியை திருக்கலயாணம் மஹோத்ஸவம் செயய இருந்தபோது பெரிய ஜீயர் சுவாமிக்கு ஸ்வப்நத தில தான் ஸ்ரீவானமாமலைப் பெரு மாளுககு எனறு இருப்பவள் என்று கூறியதாகவும பிறகு ஸ்ரீவான மாமலைப் பெருமாளின் நியமனப்படி வானமாமலை ராமானுஜ ஜீயர் சுவாமி திருவேஙகடமலையிலிருந்து ஸ்ரீவர மங்காதேவியை எழுநதருளப் பணணிக்கொண்டு வந்து ஸ்ரீவான மாமலைப் பெருமாளுக்கும் ஸ்ரீவர மங்கை பிராட்டிக்கும திருக்கல்யாண மஹோத்ஸவத்தை நடநதேறச் செய்தார்கள். ஸ்ரீவரமங்கா தேவியை புத்ரீ பாவத்துடன் ஸ்ரீ வானமாமலை ஜீயர் சுவாமி திருக்கல யாணம செய்து வைத்ததால், இன றளவும் மடத்திலிருந்து ஸ்ரீவர மங்கா தேவிக்கு புத்ரீ பாவத்துடன் ஒவ்வொரு வைபவமும் நடை பெறுமபோது சீர்வரிசை போன்ற பரபுகதமான உபலாலந வைபவங் கள் இன்றைக்கும் நடைபெற்று வரு கின்றன.

ஸ்வயம வயக்த் பெருமாளான தோத்தாதரி நாதன பெருமாளுககு தினமும தைல அபிஷேகம நடை பெறுவதுடன வருடநதோறும தை மாதம் 'அமாவாசை' அன்று ஒரு கோட்டை எணணெய்க்காப்பு (142 படி) உற்சவம வெகு சிறப்பாக நடை பெறும.

இம்முறை ஒரு கோட்டை எண்ணெய்ககாப்பு உற்சவம் விபவ வருஷம் தை மாதம 24நதேதி திங்கள் அனறு (6-2-89) நடைபெற்றது. ஞாயிறும் திங்களும் சேர்ந்தது அமா வாசை ஆனது போல் அன்று ஞாயிற் றுக்கிழமை அமாவாசை தொடங்கி திங்கள் கிழமை அமாவாசை முடிவு பெறும் அமைப்பில் இருந்தது. புஷ் கல யோகததுடன் கூடிய அமாவாசை என்ற சிறப்புடன் பெருமாளுக்கே உரிய திருவோண நட்சத்திரம் அன்று நடைபெறறுக் கொண்டு இருநதது. இத்தகைய சிறப்புடன் கூடிய நன் நாளில் தரிசனத்திறகாகக் காத்திருக் கிறோம்

இஙகே உள்ள சடாரியில் ஸ்ரீசட கோபனின திருவுருவம் பொறிக்கப் பட்டுள்ளது.

சிந்து தேசத்து அரசன், குசாஸன மஹரிஷியால் சபிக்கப்பட்டு நாய் உருவம பெற்று அலைநது திரிநதுபின் இங்குள்ள சேற்றுத்தாமரை புஷ் கரிணியில் ஸநானம செய்து பழைய அரச உருவத்தை அடைந்ததாக ஸ்தல வரலாறு.

ஊர்வசியும் உலோத்தமையும் இத் தலத்தில் தவமிருந்து பகவான் அரு ளால் அவர்கள இருவரும் பெருமாள் அருகில் இன்றளவும் இரு பக்கஙகளி லும் நினறு வெண்சாமரம் வீசிக் கொணடிருப்பதாக ஐதீகம்

பகவான் மதுகைடபர்களை அழித்த போது பூமிதேவி தன் இயல்பான தூய்மையை இழநததாகவும், இத் தலத்தில தவமிருந்து பகவான காட்சி தநது, பகவான அருள்புரிந்து 'மாசு கழுவப பெறறுய்' என்று சொல்லி வைகுணடத்தில் வீற்றிருப் பது போல் இத்தலத்தில ஸ்ரீ வைகுணட விமானததில ஸ்ரீதேவி பூதேவி ஸமேதனுக ஆனந்த மயமாக காட்சி கொடுப்பதாக ஸ்தல வர லாறு

ப்ரஹ்மா, இந்திரன், ப்ருகு, மார்க் கண்டேயர் ஆகியோருக்கு ப்ரத்யட்சமாககாட்சி அருளிய திவ்ய தேசம். இப்படியாக இறைவனல் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் முதல் சாதாரண மனிதர்

வரை அவர்களுக்கு ஏற்படும் தடை களைக் களைந்து நிலையான இன்பத்தை அருள் பாலித்து வருகிறார்.

உடலைக் கொடுத்து உய்ய வைப்பவன் அவனே. உயிர் என்று தோன்றி விட்டதுமே உயிர்க்குயிராய் இணைவதும் அவனே. நினைத்தாலே மனம் நெகிழும் கருணையின் உருவகம் அவன். கடந்தும் உள்ளும் விளங்கும் கடவுள் எனும் பொருளின் இலக்கணமே அவன்தான். அதனால்தான் வேதம் 'யச்ச கிஞ்சித் ஜகத் ஸர்வம் த்ருச்யதே ச்ரூயதேபிவா, அந்தர் பஹிஸ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:" என்று துதிக்கிறது.

இவ்வாறாக இத்தலத்தின் ப்ரபாவங்களை எல்லாம் கேள்வியுற்று மெய்யுருகி நிற்கிறோம். மூலவர் தோத்தாத்திரிநாதன் வீற்றிருந்த திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலத்தில் அருள்பாலித்து வருகிறார். நந்தவர்த்தந விமானம் கம்பீரமாக காட்சி அளித்து உற்சவத்தைக் காண வந்த ஆஸ்தீக பெருமக்களை வரவேற்றபடி இருந்தது.

எந்தத் திருக்காட்சியை காணக் காத்திருந்தோமோ, அந்த நேரம் வந்து விட்டது. ஆம்! பெருமாளுக்கு ஒரு கோட்டை எண்ணெய்யில் திருமஞ்சனத்திற்கு ஆயத்தம் செய்துகொண்டு இருந்தார்கள் கோயில் பட்டர்கள்.

அழகன் கண்ணனை நீராட்ட யசோதை அன்போடு அழைப்பதை பெரியாழ்வார் அனுபவித்துப் பாடியது நமது கண்முன் வருகிறது.

"வெண்ணெ யளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியும் கொண்டு
திண்ணென இவ் விராவுன்னைத்
தேய்த்துக் கிடக்கநா னொட்டேன
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங்
கெத்தனை போது மிருந்தேன,
நண்ணா லரிய பிரானே!
நாரணா! நீராட வாராய்"

எண்ணெய்க்காப்புக்கு என்று பிரத்யேகமாக தயாரித்த எள் எண்ணெய் மற்றும் வாசனாதி திரவியங்கள் பட்டர் பெருமக்கள் தங்கள் கரங்களால் அள்ளி அள்ளி முகண்டு எடுத்து பெருமாள் திருமேனியில் சேர்த்த வண்ணம் இருந்தனர். காலை மணி 8 முதல் 11 மணிவரை ஒரு கோட்டை எண்ணெய்க் காப்பு நடந்த வண்ணம் இருந்தது.

இந்தக் காட்சியை கண்ணுறும் போது மனதில் ஓர் எண்ணம் உதிக்கிறது. மச்சாவதாரம் எடுத்து வேதம் தந்த முதல்வன்-கூர்மமாக எழுந்தருளி மந்தாரமலை தாங்கி அமரர்க்கு அமுதமீந்த முகுந்தன்-வராஹமாக வைபவித்து அவுணர்களைச் சமஹரித்த சாரங்கன்-நரசிம்ம ரூபமாய் சேவை சாதித்து இரணியனுக்கு மோக்ஷம் அளித்த ஸ்ரீமந் நாராயணன் - வாமனனாக ஜனித்து சேவடியால் மூவடி அளந்து பலியை அருளி இந்திரனுக்கு உபேந்திரனான சதுர்புஜன் - பரசுராமராக பூமியில் அவதரித்து துஷ்ட சத்திரியர்களை சமஹரித்த பார்க்கவன்- ஸ்ரீராமச் சந்திரனாக அவதரித்து ராவணாதி அரக்கர்களை வதம் செய்த கோவிந்தன்-பலபத்ரராக அவதரித்துப் பராக்கிரமங்களை செய்த ஹலதரன்-ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்துகீதோபதேசம் செய்த ஸ்ரீவாசுதேவன்-கல்கியாக வந்து கலியுகம் காக்கும் புருஷோத்தமன் - அங்கிங்கெனாதபடி எங்கும் பேரொளி பொங்க எழுந்தருளி தியானிக்கும் பக்த கோடிகளுக்கு சகல சௌபாக்கியங்களையும் மங்களங்களையும் வாரி வாரி வழங்கி பக்தர்களுக்கு எதிர்வரும் தடைகளை விடை பெறச் செய்து பேரருள் புரியும் ஸ்ரீமந் நாராயணனுக்கு யுகம் யுகமாக ஓய்வு ஒழிச்சல் இல்லாத வேலையல்லவா! அதனால்தான் பெருமாள் களைப்பு தீர ஒரு கோட்டை எண்ணெய்க்காப்பு இத்திருத்தலத்தில் செய்விக்கிறார்கள் போலும்!!

எள்ளில் இருந்து எடுக்கப்படும் சாதாரண எண்ணெய்தான் பெருமாள் திருமேனியில் பட்டவுடன்தான் எவ்வளவு மகத்துவம் பெறுகிறது. திருமஞ்சனம் செய்யும் அந்த எண்ணெயையே எடுத்து சுமார் 25 அடி நீளமும் 15 அடி அகலமும் உள்ள கிணற்றில் ஊற்றி விடுகிறார்கள். தினமும் நடைபெறும் தைல அபிஷேகத்தினையும் அதில் சேர்த்து விடுகிறார்கள். எண்ணெய்க்கிணறு வெயில், மழை ஆகிய இயற்கைப்பாதிப்புகளுக்கு ஆட்படும்படி திறந்த வண்ணமே உள்ளது. ஆனால் அந்த எண்ணெய் சிறிதுகூட கெட்டுப்போவது இல்லை. இந்த எண்ணெயை நம்பிக்கையுடன் சாப்பிட்டும், உடலில் பூசியும் தீராத கொடுமையான வியாதிகள், குஷ்டம் போன்ற வியாதிகள் கூட நீங்கப் பெற்று சென்றவர்கள் ஏராளம். அகஸ்தியர் தமது பாடலில் 'கொடுமையான ஊழ்வினைக் காரணமாக தீராத கொடுநோய் ஆட்பட்டாலும் வருந்த வேண்டாம், திருச்சீரிவர மங்கைதிவ்யஸ்தலத்தில் எண்ணெய்க் கிணறு உள்ளது. அதனால் போக்கிக் கொள்ளலாம்' என்று குறிப்பிடுகிறார். சேவார்த்திகள் இந்த எண்ணெயைப் பெற்றுக் கொள்ள வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

ஸ்ரீ மணவாள மாமுனிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அஷ்டதிக் கஜங்களில் ஒருவரான ஸ்ரீ வானமாமலை ஜீயர் சுவாமி அவர்களின் தலைமையிடம் இங்கு அமைந்திருக்கிறது. வானமாமலை ஜீயர் இங்கேதான் எழுந்தருளியிருக்கிறார். இவருடையதே இந்த ஸந்நதி.

ஸ்ரீ மணவாள மாமுனிகளின் தங்க மோதிரம் இங்கே பாதுகாக்கப்பட்டு ஸ்ரீ ஜீயர் சுவாமி ஐப்பசி மாதம் மூலம் நட்சத்திரத்தன்று சாத்திக் கொண்டு ஸ்ரீபாததீர்த்தம் ஸாதிக்கிறார். தற்போது ஸ்ரீவானமாமலை மடத்தில் 28வது பட்டம் ஜீயராக ஸ்ரீமத் பரமஹம்ஸ சடகோப ராமானுஜ ஜீயர் சுவாமிகள் அலங்கரித்து வருகிறார். ஜீயர் சுவாமி ஸ்ரீ வைஷ்ணவ சமயத்திற்கும், ஆன்மீக உலகத்திற்கும் ஆற்றிய தொண்டுகள், பகவத் கைங்கர்யங்கள் குறித்தும் ஆஸ்தீக பெருமக்கள் அனைவரும் அறிந்ததே. ❀

# ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம்



திருககோயில்களில தெயவஙகளுக குத் திருமணஙகள் நடதது வதன நோககம — மானுட இனம தனது உடற்பற்ருலுணடாகும காமத்தைச் செம்மைப படுதது வதறகாகவே யாகும்.

'மலரைவிட மெனமையானது காமம். அந்த உண்மையை அறிநது அதன நல்ல பயனைப் பெறக கூடிய வா சிலரே' எனபாா வளளுவா.

பலர் பயனைப பெருமைக்குக காரணம-காமத்தின் தனமையை உணராமையேயாகும். உணர்நதாலும மானுட முயற்சியால் அதனைச் செம் மைப்படுதத இயலாமையேயாகும. இயலாதெனபது ஸ்ரீ ஆணடாளின் திருவுளளமாகும.

ஆண மகன ஒருவனுக்கு வாழ்க் கைப் பட்டேயாகவேண்டும் — பெண் ணுகப் பிறநத ஒருத்தி. அவள் உரி மைப் பட்டிருக்கவேணடும் — கணவன் ஒருவனுக்கே. தான முயலாமல் கணவனையே நம்பி இருக்கவேண்டும். தன் தேவைகளுக்குத் தான்அனுபவிக் கப்படுவளாக இருககவேணடும் - கண வனுல மட்டுமே.

அதுபோல் ஆன்மாககள் அனை வரும் பரம புருஷனுக்கே உரிமைப் மைப்பட்டவர்கள். தன் தேவை களுககுத் தான முயலாமல், பரம புருஷனையே நம்பி இருப்பவர்கள். பரம புருஷனுல் மட்டுமே அனுபவிக் கப்படுவர்கள். அதனுலேதான ஆன் மாக்கள் அனைவரும் பெணனென் றும், பகவான் ஒருவன்தான்

பகவானைக காம்பபத (ஆசைப படுவதே) காமம எனப்படும். தாழ்ந்த தான உலகியல காம மனறு ஸ்ரீ ஆண டாளின காமம. வேதாநதங்களில் கேட்கத்தககது, மனனம் பண்ணத் தக்கது; தியானிககத தக்கது.

மறை ஓதுபவாகள் ஓம குண்டத் தில விணணவர்கசூ இடும உணவு தனனுடைய காமம் எனற பொரு ளில 'மறையவர்கள் வேள்வியில் வகுத்த அவி' என்பாள் ஆணடாள். அந்த உணவை உணபவன் அதாவது அவனை அனுபவிப்பவன தன் திருக் கரஙகளில் சககரத்தையும் சஙகையு முடைய அநத எமபெருமானே என் றும் கூறுவாள

அவ்விதம் ஆணடாள் கூறக காரணம — ஆன்மாவின இயல்புகள், உடலால் பெணணுகப் பிறந்தவா களுக்கு இருக்கவேணடிய இயல்புக ளோடு ஒத்திருப்பதேயாகும. அதனை ஈணடு ஆராயவோம்.

'யான காமததை எனனுள மறைகக முயல்வேன. ஆனுல அது என குறிபபினபடி எனனிடம நிற காமல் புமமல்போல தானே வெளிப பட்டு வருகிறதே' எனறு கூறுவாா வள்ளுவா.

அத்தகைய வலிமையுடைய அந்த காமததைச்செம்மைப்படுத்த, அதனை இறைவன பால் செலுததுவதே வழி யாகுமஎன்று கூறுவாள ஆணடாள.

'உனனேடே உற்றேயிருககவேண டும, உனனை விடடு நீங்கவே மாட டோம். உனககே நாங்கள் அடிமை செய்வோம்' என்று இறைவனிடம முறையிடும ஆணடாள, அடிமை செயய விடாமல் உடற்பற்ருலுண் டாகும் உலகியல் காமங்களை இறை வனிடமே மாறறும்படிப பிரராததிக் கின்ருள்.

'மற்றை நங காமஙகள் மாற்று', என்பது ஆண்டாள் இறைவனுககு விடும் வேண்டுகோளாகும. காமத் தை தேவனாக பாவித்து, 'இவன பொயயான தெயவம எனறு சொல்லி மனஙகொதித்து உன கவுரவத்தை அறிநது நிநதிக்க மாட்டேன' எனற பொருளில,

" தத்துவம இலியெனறு நெஞ்செரிநது
வாசகதது அழிததுஉனனை வைதிடாமே

எனறு கூறுவாள். உடற்பறறாலுண டாகும் காமததை ஸ்ரீ ஆணடாள் 'தததுவம' எனறு கூறுகிருள். எல் லோராலும தததுவத்தை உணரமுடி யாது' கடைப் பிடிக்கமுடியாது. அத ஞல்தான வளளுவா, 'சிலா அதன செவ்வி தலைப்படுவர்' எனறு கூறி ஞா.

ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீராமுலுதேசிகன்,
புதுசசெந்நெல்குளம்.

புருஷனென்றும் மறை கூறும். (ஸ ஏவம புருஷோத்தம' ஸ்திரீ ப்ராயம் இதரம ஜகத)

ஆணடாள் ஸ்ரீ பெரியாழ்வாரின மூலம் பக்திக் காதலை வளர்த்துக கொண்டு எமபெருமானை அனுபவிக்கத துடியாய்த துடித்தாள் ஆனால் திருவரங்கத்து அழகிய மணவாளன காலம் தாழ்த்தினான். காரணம — ஆணடாளின உள்ளம் பக்குவமடைந்து பரிபூர்ணத்துவம அடைவதற்காக தன திருமேனியில அவளுடைய அகக கணணை ஈடுபடுத்துவதறகாக தனனுடைய கல்யாண குணங்களில அவளுடைய நெஞ்சத்தை ஊறறெடுக்கச செய்வதற்காக. வழியில்லாத வழியாகிலும் தனனைப் பெறவேண்டும என்னும பதற்றததை அவள உடலிலும உளளத்திலும் உண்டாக்குவதற்காக.

''எததைத் தின்னால் பித்தம் தெளியும்'' என்னுமாப் போலே அவளைக் கலங்கிப் பரிதவிககச் செயவதற்காக தனக்குப் பூமாலை சூட்டித் தனனுடைய அருளைப் பெற்றதன் மூலம் பாமாலைகளைப்பாடிஅவைகளின் வாயிலாக சமசாரக கடலில விழுந்து பரிதவிப்பவாகளைக கரையேற்றச் செய்வதற்காக, எம்பெருமாள ஆணடாளை அனுபவிககக காலம தாழத்தினான.

தலைவனைப் பிரிந்த காம மயககத்தால் அஃறிணைப் பொருள்களையும விளித்துககூறுவாளதலைவி 'இதுகாமம மிக்க கழிபடர் கிளவி', எனறு சொலலப்படும். பிரிவினாலே காதல விஞ்சுவதனால மிகத் துன்புறுகின்ற சொல் என்பது இதன பொருளாகும். ஆணடாள அந்நிலையை அடைந்தாள்.

'கேசவ நம்பியைக கால பிடிபபாளென்னும் இபபேறனக்கருள்' எனறு காமனிடம் பிரார்த்தித்தாள ஆணடாள். ஆய்ச்சியர்களாகத் தன்னையும் தோழிகளையும் பாவித்துக கொண்டு மணல் வீடு கட்டி விளையாட, அதைக் கண்ணன் வந்து அழிக்க, உடனே ஆண்டாள் 'சிற்றிலோடுஎங்கள்சிந்தனையையும் சிதைக்கக்கடவையோ, கோவிந்தா'' என்று கண்ணனிடம் முறையிட்டாள.

பொய்கைககுப் பனி நீராட வந்த ஆயமகளிருடைய ஆடை அணிகளைக களவாடிய கணணனிடம அவர்கள் பிரார்த்தித்தது போல், ஆணடாள தன் தோழிகளுடன் அவர்களை அநுகரித்து, 'துகிலைப் பணிநதருளாயே', 'குருந்திடைக் கூறை பணியாய்' 'பட்டைப பணிநதருளாயே' எனறு கூறிக கணணனைப் பிரார்த்தித்தாள். ஆடைகளைக கொடுத்த கணணனோடு புணாச்சியும் நடைபெறறு விடுகின்றது பிரிவுடன தலைக் கட்டுகின்றது இந்தப் புணர்ச்சி. உடனே கூடல் இழைக்கின்றாள் ஆணடாள, எப்போது மீணடும் சந்தர்ப்பம் நிகழும் எனறு பார்த்தறிய

வட்டமாகக் கோடு கீறி அதற குள்ளே சுழி சுழியாகச சுற்றும சுழித்து இரணடிரணடு சுழியாகக் கூட்டிப் பார்க்கும்போது இரட்டைக கணக்காக முடிவு பெற்றால் கூடுகை; ஒற்றைக கணக்காக முடிவு பெற்றால் கூடாமை எனறு உத்தியை நிலைநாட்டிககொணடு ஏற்படுத்தும் ஒருமுறையே 'கூடலிழைத்தல்' என்பது. இது கண்களை மூடிக்கொண்டு செய்யப் படும் செயலாகும்.

கணவன் பொருள் ஈட்டும் பொருட்டு வெளிநாடு சென்றுவிட்டால் எப்பொழுது திரும்பி வருவார் என்று மனைவி கூடலிழைப்பது, குறி பார்ப்பது இயறகையாகும.

சீதாப்பிராட்டி, ருக்மிணிப் பிராட்டி ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணன தங்களை விட்டுப் பிரிந்ததமைக்காக, எப்பொழுது வருவாாகள்? எனறு கூடலிழைததால அது சாதாரண ஒரு விசயமே ஏனென்றால் ஸ்ரீராமன ஸ்ரீகிருஷ்ணன அவாகள காலத்தில மானுட உடல தாங்கி அவதாரம செயதிருநதாாகள்.

ஆனால் ஆணடாள வாழ்நத காலத்தில் பகவான மானுட அவதாரம் எடுககவிலலை. அவன் அர்ச்சை வடிவில, சிலை உருவததில் இருநதான. அந்த உருவில் இருப்பவன தனனை அனுபவிகக வருவான் என்ற நமபிக்கையில் இருநதாளென்றால், அவளுடைய உறுதியான பக்திக்கு ஒப்பாக எந்த தெய்வப் பெண்ணையும் கூற முடியாது. எனவே தெய்வத திருமணஙகளிலே ஸ்ரீ ஆண்டாள திருமணத திறகு ஒபபாக எதையுமே கூறமுடியாது

கூடலிழைத்தும் எமபெருமான வநது முகம் காட்டவிலலை

குயில, சஙகாழவான, மேகம, காாக்கோடல பூக்கள், முல்லை மலாகள் போனற அஃறிணைப் பொருள்களிடமும எம்பெருமானை விட்டுத் தான பிரிநது படும் அவல நிலைமைகளைக் கூறினாள. தன்னை அவனோடு சேர்த்து விடுமபடி வேணடினாள். பயனிலலை. ஓர் முடிவிற்கு வந்தாள.

(ஆட்டுக் கழுத்தில் தொங்கும பயனற்ற முலைபோலே) 'எம்பெருமானை அணைக்கும பேறு பெறாத தன் மாாபகங்களை வேரோடு பறறிப் பிடுங்கி அவனுடைய மார்பில எறிநது என னுடைய துக்கத்தைத தீாத்துக் கொள்வேன்' எனறு காதல் முற்றிய நிலையில் மனதிலுளள சினமும துக்கமும் தோன்றும்படிக கூறினாள ஆணடாள.

இனியும் தாமதம செயதால் ஆணடாளின நிலைமை மோசமாகி விடும் எனறு திருவரங்கன் தன் கோயிற பரிசனங்கள கனவில் தோன்றி சகல வித மங்கல வாத்தியங்களுடனும் இதர ஏற்பாடுகளுடனும் ஆணடாளை நவரத்தினம் இழைத்த பலலககில ஏறறி அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அதனை அவர்கள் பெரியாழ்வாரிடம கூறினர் செவிக்கு அமுத மான இசசெய்தியைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியுறறாா.

ஸ்ரீ ஆணடாளைப் பல்லக்கில் எழுநதருளப்பணணி திருவரஙகம் பெரிய கோயிலை அடைநதாா. மஙகல ஒலியுடன பெரியாழவாா பெருமாளைச சேவிககச செயதார், பெரிய பெருமாளின் முன் மணடபத்தில் ஆணடாளை நிறுததி, இருமபை ஈர்ககும காநதம போல கவர்நதது, பெருமாளின பேரழகு அரஙகன திருவடி வருடக் கருதினாள, அவளால கவரப் பட்ட ஆண்டாள். அரவப் படுககையை மிதித தேறினாள். பெரிய பெருமாளின் திருமேனியில கலந்தாள். அவனை என்றும் பிரியாதிருக்கும் நிலையை அடைநதாள்.

**ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்!**

# உயர்வற உயர் நலம் உடையவன்

தமிழ்மறை எனறும தமிழ் வேதம் என்றும போற்றப்பட்டு வருவதும தமிழ் மொழிக்கே தனிப் பெருமை யளிக்க வல்லதான நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் சிறந்த பகுதியு மாகிய 'தமிழ் உபநிஷத்' என்று வழங்கப்படும் திருவாய் மொழியின பெருமையை யாவரும் நன்கறிவர். இவ்வுபநிஷத்தின் முதல் பத்தில, முதல் திருவாய் மொழியின் முதல் பாசுரம்,

"உயர்வற உயர்நல முடையவன்
யவனவன்
மயர்வற மதிநல மருளினன்
யவனவன்
அயர்வறு மமரர்களதிபதி யவனவன்
துயரறு சுடரடிதொழுதெழென்
மனனே!"

என்பதாகும். தேனினுமினிய 'திருவாய் மொழி' யெனும் செஞ்சொற் கவிகளுக்கு இச்செய்யுள் எல்லா விதத்திலும் முதன்மையாக அமையும் அற்புதத் தனமை வாய்ந்ததாகும். தாயின் சாயலைச் சேய் பிரதிபலிப் பது போல, இந்த முதற் பாசுரத்தின கருத்தே மற்ற 1101 பாசுரங்களி லும் பதிந்து கிடக்கின்றது, இதுவே திருவாயமொழி எனும் தீங் கனிகள நிறைந்த கறபக விருக்ஷத தின் முதல் தனி விததாகும். இதில் ஸகல வேதஙகள், உபநிஷத்துக்கள், புராணஙகள், தர்ம சாஸதிரங்கள், இதிகாசங்கள், தத்துவ நூலகள் முதலியவற்றின் ஸாரம் அடங்கிக் கிடக்கின்றதெனில் சாலப் பொருந் தும். இராமாயணத்தை இயற்றிய வால்மீகி மகரிஷி, தன் வாயினின்றும் வெளிவந்த சுலோகத்தின் அற்புத மான அமைப்பை நினைந்து பிரமித் திருக்கையில்,

"மச்சந்தா தேவ தேவ ப்ரம்மந
பரவருத் தேயம் ஸரஸ்வதீ"

என்று பிரம்மதேவன் உண்மையை விளக்கினாற் போல, ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளிய தீங்கவிகள் இவ ரால் சிருஷ்டித்துக் கூறப்பட்டவை யல்ல. எம்பெருமானாலேயே ஆழ் வாரை வியாஜமாக்கிக் கொண்டு உலக க்ஷேமார்த்தமாய்த் தோற்றுவிக்கப்பட்டனவாகும்.

திருவாய் மொழியின் அற்புதமான கருத்துக்கள் யாவும், வித்தினுள் சூக்ஷ்ம ஸ்வரூபமாய்க் கிடக்கும் பெரிய மரம் போலே, முதற்பாட் டான 'உயர்வற உயர்நல முடையவன்' என்ற பாட்டினுள் அடக்கப் பட்டுள்ளது. அதனை இங்குத் தெளி வாகக் காண்போம்.

உயர்வற உயர்நலமுடையவன யவனவன்:

எம்பெருமான் ஆழ்வாருக்கு, ஒரு காரணமும் இன்றியே, தன் கல்யாண குணங்களையும், பல்கோடி நூறாயிரம் நித்ய சூரிகளுக்கு நிர்வாஹகனாய் இருக்கும்படியையும், தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின சிறப் பையும் காட்டி உபசரித்தான். இவற்றை உள்ளபடி ப்ரத்யக்ஷமாய அனுபவித்த ஆழ்வார், அதனால் உண டான அளவிட முடியாத இன்ப வெள் ளத்தை, வாயினால் பாடியல்லது தரிகக மாட்டாத நிலைமையில், தான் அனுபவித்தவாறே பேசுகிறார். உயர்வு அற-வருத்தமில்லாமல் உயர்வு உண் டாகும் போது அதைப் பெற பிர யாசைப்படுவது இன்றியமையாத தாய் இருக்கும் மற்றவர்கள் விஷயத் தில், பிரமன் பலகோடி யுகங்கள் தவம் செய்து மீணடும் தன் ஸ்தானத் தைப் பெற்றான். இவவாறு அவர வர்கள் தங்கள் பேற்றுக்கேற்றவாறு அனுபவிக்கும் வருத்தம் சிறிதும் இல்லாதபடி என்றவாறு உயர் நலம்-உயர்ந்து கொண்டிருக்கிற ஆனந்த குணம. 'நலம்' என்பதும் 'ஆனநதம்' எனும் குணத்தைக் குறிக்கும். அள விலாத ஆனந்தத்தைத் தரக்கூடிய ஸகல சேதனா சேதன ரூபமான ஸமஸத விபூதிகளையும் உடையவன் எம்பெரு மான் என்றாயிற்று. இவவானந்த குணம் முதலியவற்றைப் பெற ஒரு விதத்திலும் வருந்த வேண்டாதபடி இவை இயற்கையாகவே அமையப் பெற்றவன் எம்பெருமான்.

திரு. எஸ். இராமசாமி,
மதுரை.

'உயர்' எனபது மேன்மையை குறிப்பதாகும. உயர்வு - எம்பெரு மானைத் தவிர எல்லா வஸ்துக்களுக் கும் உண்டான எல்லாவிதமான உயாவும், அற-இல்லாமல் போகும் படி. உலகில் உள்ள பொருள்கள் யாவும் ஒனறைவிட்டு மற்றொன்று உயர்ந்தோ அல்லது தாழநதோ இருக்கின்றன. இது இயற்கையாக அமைநதது. அங்ஙனமிருக்க எம் பெருமானுடைய உயர்வை நோக்குங கால், மற்றவைகளின் உயர்த்தி அற்றுப் போய்விடுவதாவது, சூரியன பிரகாசிக்கும் போது நக்ஷததிரங்கள் போலவும், மேருபர்வதத்தின் உச்சி யில் நிற்பவனுக்குக கீழே உள்ள பொருள்கள் போலவும், இருக்கும் பொழுதே இல்லை எனலாம் என்றபடி தோன்றாமல் இருப்பது.

உயர்:

அவ்வாறு அளவிட முடியாது. அதாவது எல்லை காண முடியாதபடி மேல் மேல் உயர்ந்து கொண்டே இருக்

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கட வனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருநதினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன் கொடைத் திட்டத்தின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொண்டு புரிநதிடும ஓர் அறிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல தளம் .

ஆழ்வார் ஏரி, மஙகளபாவி, சஙகுமிட்டா, சேஷாத்ரிநகர், அஞசநாத்ரி, கருடாத்ரிநகா ஆகிய காட்டேஜ்களின் ஏ மறறும் பி பகுதிகளின் மேல்கட்டபபட்டு வரும் 'சி' மற்றும 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும. இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன் கொடைத தொகை ரூ. 1. 50 இலட்சமாகும.

## ராம பகீச்சா விருந்தினர் விடுதிகள .

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைககொணட மூன்று விருந தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர் களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டா பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள் :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1× / 2'4' அளவில் இவ்வறைகள் விளங்கும் இவ அறைககான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரீ நகரில இரண்டாவது விருநதினா விடுதியில் உள்ள இரணடு தளங்களில் கட்டப்பட் டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும. 4.20 மீ × 4.20 மீ பரப்ப ளவில் இவவறைத தொகுதிகள் விளஙகும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக கட்டிடத்திற்காக வோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாணமை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற கான நனகொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/ அறக்கட்டளை போன்ற எநதப் பெயரிலும வழங்கலாம்.

# சலுகைகள்

நனகொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனததின அல்லது அறக்கட்டளை யைச் சாாந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின அலுவலர்களோ வருடததில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தஙகிடும்போது 10 நாட்களுககு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளித்த தங்கு வசதி களில் தங்கலாம. அவர்கள் நனகொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருநது வசூலிக்கப்படும்.

நனகொடையாளர்களின் பெயா, முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு :

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517501. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

**தரும பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:**

கும் அனுபவம். 'தொல்லையஞ்சோதி நினைக்குங்கால் என் சொல்லளவன்று, இமையோர் தமக்கும் எல்லையிலாதன தாழ்ப்புச் செய்யும்' என்று இவர் தாமே பேசும்படி இருக்கும். உயர்வு அதிகமாக ஆக, அது வீழ்ச்சியிலேயே முடியுமென்கிற உலக இயற்கையை மீறிய இயல்புடைத்து எம்பெருமானுடைய ஆனந்த குணம். யாராலும் எக்காலத்தும் அளவிட்டு அனுபவிக்க கூடாதது என்றபடி.

இப்படி எல்லை காண முடியாத தான எம்பெருமானுடைய நற்குணங்கள், அனுபவிக்கிறவர்களுக்கு நலமாயிருக்கும். அதனாலேயே குணம் என்று கூறுதபடி 'நலம்' என்றார். 'உயர்வற உயர்குண முடையவன்' என்று சொல்ல வேண்டியிருக்க,'உயர்வற உயர்நல முடையவன்' என்றது இதை கருத்தில கொண்டு. இவ்வாறு உயர்வற உயரா நின்ற எல்லையில்லாத நற்குணஙகளை உடையவன் எம்பெருமான். இக்குணங்கள் எம்பெருமானிடம் உள்ளன என்றாரில்லை. ஆனால் 'உயர்வற உயர் நலமுடையவன்' என்றருளினார். இதன் கருத்து, இக்குணங்களைவிட்டு, ஒரு கணமும எம்பெருமான இருகக மாட்டான். சந்தனக கட்டையை அதன் வாசனையால் அறிந்து கொள்வது போல, இக்குணங்களையிட்டு எம்பெருமானை சொல்ல வேண்டும்படி இருக்கும். மேலும் நலம் என்ற சொல்லிற்கு 'ஸமஸ்த கல்யாண குணாத்மகோ ஸௌ' என்பன போன்ற புராண வசனங்களையும் காணலாம்.

'யவன்' என்பது இக்குணங்களுக கெல்லாம் இருப்பிடமான இறைவனது ஸ்வரூபத்தை சொல்லுகிறது. யவன்=யாவனொருவன், உயர்வற உயர்நல முடையவன் அவன் என்று சேர்ப்பது. இக்குணங்களினால் எம பெருமான் ஏற்றம் அடைகின்றான் என்பதல்ல. இக்குணங்கள் அவனை அடைந்து ஏற்றம் பெறுகின்றன எனும்படியான ஸ்வரூப வைலக்ஷண்யம் உள்ளவன் எம்பெருமான். உயர்வற உயர் நலமுடையவனை எம்பெருமான் மயற்வற மதி நலம் அருளினன் என்று சொலலாமல 'யவன உயர்வறஉயர் நலமுடையவன அவன்' என்று அருளிச செய்ததனால் இவ்வர்த்தம் கிடைக்கிறது. இக் கருத்து 'தைத்திரீயோபநிஷத்தில்' 'ஆனந்த வல்லீ' என்னும் பாகத்தின் கருத்தை விளக்கிக் கூறுவதாகும். எம்பெருமானுடைய ஆனந்தம் எத்தன்மையது என்பதை உபநிஷத் விவரிக்கிறது. நாம் தினசரி வாழ்க்கையில் கண் கூடாகக் காணும் உண்மையை அடிப்படையாகக் கொண்டு பரம் பொருளின் ஆனந்த குணத்தை விளக்கிக் கூற முயற்சிக்கிறது வேதம். சிறு பொருளை உடையவனுடைய ஆனந்தம் ஒருவிதமானது. பெருஞ் செல்வம் படைத்தவனுடைய ஆனந்தம் வேறு வகையானது. அவ்விதமே அழகிற் குறைந்தவனுக்கும் அழகு நிறைந்தவனுக்கும், அறிவு குறைந்தவனுக்கும், பேரறிவாளனுக்கும் உண்டாகும் ஆனந்தம் வெவ்வேறு வகையானது. இவ்வாறு ஆனந்தம் உலகில் மனிதர்களிடம் ஒன்றைப்போல் மற்றொன்று இல்லை. ஏற்ற தாழ்வாகவே காணப்படுகிறது. இதுவே மனுஷ்யானந்தம் எனப்படும்.

இந்த மனுஷ்ய ஆனந்தத்தைப் போல் நூறு மடங்கு அதிகமானது மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம். இதிலும் நூறு மடங்கு அதிகமானது தேவ கந்தர்வர்களின் ஆனந்தம். இதைப்போல் நூறு மடங்கு அதிகமானது பித்ருக்களின் ஆனந்தமாகும். இதற்கு அடுத்தபடியில் 'ஆஜானஜ தேவர்களின்' ஆனந்தம். அதன் மேல் கர்மதேவர்களின் ஆனந்தம். இதன் பிறகு தேவர்களின் ஆனந்தம். இதற்கு மேல் இந்திரனுடைய ஆனந்தம். அதிலும் உயர்ந்தது ப்ருஹஸ்பதியின் ஆனநதம். இதிலும் சிறந்தது பிரஜாபதியினுடைய ஆனந்தம். இதிலும் நூறு மடங்கு அதிகமானது பரப்ரம்மத்தின் ஆனந்தம் என்று முடிவு கட்டுகிறது. இதுவே ப்ரம்மானந்தம் என்று வழங்குவர். இவ்வாறு எத்தனை தரம் கூட்டிக் கொண்டே போனாலும் ப்ரம்மானந்தத்தை இன்னும் சொற்களில் உள்ள படிக்கூற இயலவில்லை. மனத்திலும் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

இதை வேதமே பின்னால் ஒப்புக் கொள்கிறது. 'யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ' என்று இவ்விஷயத்தில் தனது தோல்வியை வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறது. ஆனந்தவல்லியில் வேதம் தான் மேற்கொண்ட காரியத்தை தலைக்கட்ட முடியாமல் திணறுவதைக் கண்ட ஆழ்வார், இதை எளிதில் எல்லோரும் புரிந்து கொள்ளும்படி விளக்கிக் கூற விரும்புகிறார். அதன் பயனாகவே திருவாய்மொழியின் முதற்பாட்டின் முதலடியில் முதல் பதம்வெளி வந்தது.

'உயர்வற உயர்நல முடையவன்' என்கிற இச்சொல், எநதக் கருத்தை வெளியிடுகிறதோ, அதே கருத்தை தான் தைத்ரீயோ உபநிஷத்தில் ஆனந்தவல்லியும் எடுத்துரைக்கிறது உபநிஷத்தை எல்லோரும் இஷ்டம் போல பயின்று அதன பொருளை புரிந்து கொள்வது சாத்தியமில்லை. ஆனால் ஆழ்வாருடைய திருவாய்மொழியை எல்லோரும் எவ்வித வரையறையுமின்றிப் பயிலலாம். அதன் கருத்துக்களும் 'விச்வஜநானு மோதநம்' என்கிறபடி சாதாரணமானவர்களுங்கூட எளிதில் புரிந்து கொள்ளுமாறே அமைநதுள்ளன. இதை நன்கு நிருபிக்கலாம். 'எம்பெருமானுடைய ஆனந்த குணம் உயர்வற உயர்ந்தது' எனகிற இவ்வளவே ஆழ்வார் கூறுவது. இதைப் புரிநது கொள்வதில் ஒரு கஷ்டமும் இல்லை. உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஒவ்வொருவரும், ஏதாவது ஒரு பொருளை 'உயர்ந்ததாக' தங்கள் அனுபவத்திலே தெரிந்து கொண்டிருப்பார்கள். பல்வேறு காரணங்களினால் அது உயர்ந்தும், தாழ்ந்தும்

இருப்பதையும் கணகூடாகக் காண லாம். இங்கு ஒருவன் உயர்ந்ததாகக் கருதும் ஒரு பொருளேயே பற்றுக் கோடாக வைத்துக் கொண்டு, எம் பெருமானுடைய ஆனந்தத்தைத் தெரிநது கொள்ளலாம். அவன் ஏற் கனவே தெரிந்து கொணடுள்ள பொருள் அவ்வளவு உயாந்ததாக இருப்பினும் 'அதைவிட உயர்நதது பரம்மானந்தம்' என்பதை அவன தெரிந்து கொள்ள வேணடியது.

ஒரு சிறுகுழநதை தாய்ப்பால உண பதிலேயே பேரானநதம் காண்கிறது. ஒரு அரசன் தன் பிரஜைகளே நன்கு பரிபாலனம் செய்வதிலேயே உணமை யான ஆனந்தம் கொள்வான. காதலா தாங்கள் இருவரும் கூடிக களிப்பதையே பேரானந்தமாகக கருதுவர். இவவாறு பல தரப்பட்ட வர்களுக்கும் 'உயர்வற உயர் நல முடையவன' என்கிற இவ ஒரு பதம் தானே அவரவர்கள் தன்மைக்கேற்ப வெவ்வேறு விதத்தில சுருக்கமாக பொருள் கொடுக்கின்றது. இப்பதம் ஒனறை வைத்துக கொணடு, படித்த வனுககும், படிப்பறிவு இல்லாத வனுக்கும, ஏழைக்கும, பணக்கார னுக்கும், சிறு குழந்தைக்கும, மானி டர்க்கும், தேவர்ககும் இறைவனேக் காட்ட முடியும் இதற்கு மிகுந்த சிரமத்துடன் பல நாள் வேத அத்யா யனம் செய்ய வேணயதும் இலலே. இதே போல் இப்பிரபநதம் பூராவும் வேத வாகயங்கள் எளிதில் புரிந்து கொளளுமாறு விளக்கப்பட்டுள்ளன. அவைகளே கடைசியில் காணலாம. இததீங்கவிகள் அறபுதமாக அமைந்ததறகு இறைவனது இன னருளும, ஆழ்வாருடைய சொநத அனுபவமுமே காரணமாகும. ஆழ் வார் தன அனுபவத்தில் கண்டதை அப்படியே பாடியுள்ளார். பிறர்க்கு உபதேசிப்பதற்காகத் தன அனுபவத் தைக் குறைத்துக் கொள்ள முடியாத நிலேயில் அவர் இருந்தார். தான் மட்டும் தனிமையில் இப்பேரின்ப வெள்ளத்தை அனுபவிக்கும் இயல்பு படைத்தவர் அல்லர். அதனுலேயே இத்திருவாய் மொழி 'உபதேச தர் மாத்யனுபவம்' என்றும், 'அனுபவகர் போபதேசம' என்றும் கூறப்படும்.

**மயாவற மதிநலமருளினன் யவனவன:**

இப்படி எண்ணிறந்த ஆனந்த குணங்கள் உடைய எம்பெருமான், ஆழ்வாருக்கு 'மயர்வற மதிநலம் அரு ளினன்'. மயர்வு-ப்ரமை. அது மூன்று வகைப்படும். 1. இவ்வுடலேக் காட்டி லும் வேறு ஆத்மா (உயிர்) இல்லே 2. உடலேக் காட்டிலும் வேருக ஆதமா ஒனறு உணடு. ஆனுல் அது ஸ்ரீமந் நாராயணனுக்கே அடிமை செய்து உய்யும் இயல்புடைத்தன்று. மற்ற தெய்வங்களுககு சேஷமானது எனறு நினேத்தல். 3. இவ்வாத்மா யாரும் சேஷமாயிருப்பதல்ல, தனக்குத் தானே எஜமானனுய் ஸ்வதந்திர மானது என்கிற எணணம். இப்படி மூன்று விதமான மயாவும் அறும்படி பண்ணினுன். மதியையும் நலத்தை யும அருளினுன். மதி-பகவத் ஸ்வ ரூபத்தை உள்ளபடி அறிதல். நலம்- எம்பெருமானிடம் அளவு கடநத அனபு. இவைகளேத் தன் அருள் ஒன்றைத் தவிர வேறு ஒரு காரண மும் இனறிக் கொடுத்து உதவினுன்.

எமபெருமானே உள்ளபடி அறி வதும், உயர்வற உயர்நல முடை யவனுன அவனிடம் அனபு பூண டொழுகுவதும் அவனருளாலனறி எவ்விதத்திலும பெறக் கூடியதனறு. 'தமகரதும பச்யதி வீதசோகோ தாது: ப்ரஸாதாத் மஹீ மாநமீசம்' என பதைக் காணக. மதிநலம் எனபதற்கு வேறு விதமாகவும பொருள் கூற லாம். நலமான மதியை அருளினன. மதிக்கு நலமாவது-நலல விஷயத தையே பற்றுதலாகும. உலகத் தாரைப் போல சம்சார சுகங்களில் செல்லாமல், திருத்துழாய் முளேக கும் பொழுதே நறுமணத்துடன தோன்றுகிற மாதிரி இவ்வாழ்வார் ஒருவருக்குத்தான் உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலே யுமெல்லாம் கண்ணன் என்கிறபடி எம்பெருமானேத் தவிர மற்றப் பொருள்கள் தோன்றுதபடியும், இடையறுது அவனேயே சிந்தித்து இன்புற்று அமர்ந்திருக்கும்படி யும் எம்பெருமான் அருளினுன். இவ்விதமான பேறு பெறு வதற்கு தம்மிடம் ஒரு உபாயமில்லா திருக்க, இறைவன் தன்னுடைய வாத ஸல்யத்தினுல் இப்பேறறை அருளி னன். 'ஸமோஹம் ஸர்வ பூதேஷு' என்றிருக்கும எம்பெருமான், ஒரு வர்க்கு அருளி,ஏனேயோருக்கு அருளா மல் இருப்பானுகில, ஆழ்வாரைத தவிர மற்றவா விஷயத்தில அவனுக்கு வைஷம்யமும் இரக்கமின்மையும இருப்பதாக ஆகிவிடும் ஆதலால இவ்வாறு அவனருளேப் பெறுவதற்கு, ஆழ்வார் பக்கலில் ஒரு முயற்சி இருந்தேயாக வேணடும். இப்பேறு பெறுவதற்காக முன்பு ஆழ்வார் பண ணின ப்ரபத்தி (சரணுகதி)யேயாகும். அவ்வுபாயம் 'அருளினன' என்று குறிபபிடுகிருர். 'எனககு அருளினன்' எனறு சொல்ல வேணடியிருக்க, 'எனக்கு' என்பதைக் குறிப்பிடாமல் விட்டது, இமமதி நலம் பெறுவதற்கு முன்பு, தம்மை உளராகக கருதாமை யினுல. 'அஸந் நேவ ஸபவதி, அஸத் ப்ரம்மேதி வேத சேத்' எனபதைக காணக.

**அயாவறும அமரர்கள் அதிபதி யவனவன் :**

அயர்வு-மறதி. அதில்லாத நித்ய சூரிகள் குழாங்களாகக கூடி அனு பவிககுமாறு தனனேக கொடுத்துக கொணடிருக்கும எமபெருமானே ஒரு நொடி மறநத அளவிலே தன இருப் பிடத்தையே இழநது இலராகிவிடும தன்மையுள்ளவாகள ஆகையால் அயர்வறும் அமரர்கள் (அயர்வற்று இருப்பதினுலேயே அமரராய் இருப் பவர்கள்) எனறு வழங்கும்படியான நித்ய சூரிகளே ஒரு நாடாக உடை யவன். தன் அருளேயே நம்பி வாழும

(35-ம் பககம் பார்க்க)



# சைவ பூஷணம்



"கோடயோ ப்ரும்மஹத்யாஞம் அகம் யாகம கோடய :
ஸத்ய ப்ரளய மாயாந்தி மஹாதேவதி கீர்த்தனாத்"

ஏன்பது சாஸ்த்ர வசனம். அதாவது கோடிக் கணக்கான பாபங்களும் "மஹாதேவா" என்று ஒரு முறை உரத்துச் சொல்வதால் நசித்துவிடுகிறது என்பதாகும். "சிவம்" என்றாலே மங்களம் என்று பொருள். ஸகல மங்களங்களையும் அளிக்கும் இந்த சிவபிரானை வழிபடும் சிவனடியார்கள் தங்கள் மனதுக்கு உகந்த சிறந்த ஆபரணமாகக் கருதுவது ருத்ராட்சமேயாகும். பூஷணம் என்றால் ஆபரணம் என்று பொருள். சைவர்களுக்கு சிறந்த பூஷணமான ருத்ராட்சத்தின் சிறப்பு, அதன்வகைகள் பற்றியும், பலவகை நுணுக்கங்


திரு. பி. ரவீந்திரன், பி.ஏ.,
திப்பிராஜபுரம்.


கள்பற்றியும் நமது ஸப்தகிரி இதழில் இதுவரை பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன. எனவே இக்கட்டுரையில் ருத்திராட்ச மஹிமை பற்றிய சில புராண வரலாறுகளைச் சிறிது சிந்திப்போம். ஸ்காந்த புராணம், உபதேச காண்டம் ருத்ராட்ச தாரணத்தின் சிறப்பை எடுததுரைக்கிறது.

அதாவது, முன்பொரு சமயம் ஸிந்து தேசத்தில் பூசக்ரபட்டணம் என்றொரு நகரம் இருந்தது. அதில் சுப்ரதிபன் என்ற அந்தணன் வாழ்ந்து வந்தான். இவனும் இவனது குடும்பத்தாரும் சிவநேயச்செல்வர்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் ருத்ராட்சம் உடலில் அணிந்து யார் பிட்சைக்கு வந்தாலும் அவர்கட்கு அன்னமிடுவது என்ற நியமத்தைக் கடைபிடித்துவந்தனர். சுப்ரதிபனது குடும்பத்தில் அனைவரும் திருநீறு பூசுதல், ருத்ராட்சம் அணிதல், சிவ பூஜை, பஞ்சாட்சர மந்த்ரஜபம் முதலிய தவங்களால் சிறந்து விளங்கினார்கள். ஒரு நாள் பண்டிதரும் சிறந்த யோகியுமான யோகங்கர் என்ற துறவி சுப்ரதிபன் வீட்டில் வந்து பிட்சை கேட்டார். அவரது உடலில் ருத்ராட்சம் இன்றி இருப்பது கண்டு சுப்ரதீபனது வீட்டில் அவருக்கு பிட்சை இடவில்லை. இதனால் யோகங்கர் மிகவும் கோபிக்கவே சுப்ரதிபனது புதல்வர்கள் தாங்கள் பிட்சை இடாத காரணத்தைத்தெரிவித்தனர். துறவி மேலும் ஆத்திரமடையவே, சுப்ரதிபனது குமாரர்கள் அவரை வெகுண்டு விரட்டி விட்டனர்.

உடனே யோகி தன்னை அவமதித்தது குறித்து நீதி வழங்குமாறு அந்நாட்டை ஆண்ட ஸாலங்கன் என்ற அரசனிடம் சென்று முறையிட்டார். அரசன் சுப்ரதிபனை அழைத்து விசாரிக்கவே அவன் தனது நியமம் பற்றி எடுத்துரைத்தான். அரசன் யோகியிடம் தாங்கள் ருத்ராட்சம் அணிந்து பிட்சையை ஏற்றால் என்ன என்று கேட்கவே, யோகி தான் அந்த நிலையை எல்லாம் கடந்துவிட்டதாகவும், தான் நினைத்தால் அடுத்த சில நிமிடங்களிலேயே தேவருலகக் கற்பக மலரையும் இங்குக் கொண்டு வரமுடியும் என்றும், தன்னைப்பற்





3



திருவண்ணுமலை ஆலயத்தின் மேல் தோற்றம் - சன்மின்ஷடை

வரனிடம் சென்று முறையிட்டனர். சந்திர கலாதாரியான ஈசன் புன்ன கைத்து எனது 'அடியவர்களான நீங்கள் இருவரும் ஒரு விஷயத்தைக் கவனிக்கவில்லை. அந்தப் பாபியின் மரண சமயத்தில் சிவபக்தையான சக்ரவாக தேச அரசகுமாரி அணிந்த ருத்ராட்சங்களில் ஒன்றை ஒரு காகம் கவர்ந்து சென்று கீழே கிடந்த அப் பாபியின் மீது போட்டது. அது மரண சமயத்தில் அவனது தலையில் குருதியுடன் ஒட்டிக் கொண்டது. இதனுல் அவனது மூவினைப் பாவங் களும் அழிந்துவிட்டன எனவேதான் சிவ கணங்கள் இங்கு அழைதது வந் தனர்' என்று கூறி அருளினுர். உடனே யமதர்மனும், சித்ரகுப்தனும், சிவ பிரானை வணங்கி விடைபெற்றுச் சென்றனர்.

இந்நிகழ்ச்சியைத் தான் நேரில் கண்டது முதல் ருத்ராட்சத்தின் சிறப்பை பரிபூரணமாக அறிந்து கொண்டேன் என்றும் அதனுல்தான் பூனைக்கு அதிதி பூஜை செய்து வர வேற்றதாகவும் தேவேந்த்ரன் இந்த் ராணியிடம் கூறினுன். பிறகு பூனை கற்பக மரத்துடன் விரைவில் ஸாலங்க ராஜனின அரசவையை வந் தடைந்தது. தேவதூதுவனுை வேத ஸித்தனும் உடன வந்து அரசனிடம இந்த்ரனது உத்தரவைத் தெரிவித் தான். உடனே அரசன் சுப்ரதீபன் என்ற அநதணனது பாதங்களில் பணிந்து வணங்கினுன். யோகியும், துறவியுமான யோகங்கரும் ருத்ராட் சததின சிறப்பை உணர்ந்து தன் ஆணவச் செயலுக்கு சுப்ரதீபனிடம் மனனிப்புக கோரினுர்.

இதேபோல் ருத்ராட்சத்தின் பெரு மையை விளக்கும் மற்றொரு நிகழ்ச்சி உண்டு. ஒரு சமயம் புஷ்கரம் என்ற நாட்டை ஸௌம்யன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவன் பெண்ணு சைப் பித்தனுகிக்காமத்தில் ஈடுபட்டு நாட்டைக் கவனிக்கவில்லை. இதனுல்

றியே பெருமையாக எண்ணி இருக் கும் இந்த சுப்ரதீபனுல் இதனைச் செய்ய இயலுமா எனறும் சவால விட்டார். உடனே அரசனும் இந்த நிபந்தனையை ஏற்றுன். யோகி திடீ றென்று மறைந்து அந்தர்தானமாகி சிறிது நேரத்தில் தேவருலகக் கற்பக மலருடன் அரசவையை அடைந்தார். அவையில் உள்ள அனைவரும் அதி சயித்தனர். உடனே யோகியின் நிபந்தனைப்படி, சுப்ரதீபன் தனது வீட்டில் உள்ள ஒரு பூனையை வர வழைக்கச் செய்தான். அதன் கழுத் தின் ஒரு ருத்ராட்சத்தை அணிவித் தான். பிறகு சிவபிரானை வணங்கி "நீ தேவருலகு சென்று கற்பக மரத் தையே இங்குககொண்டு வருவாயாக. இது நான வணங்கும் சிவபிரான் மீது ஆணை" எனறு பூனையைப் பார்த்துக் கூறினுன்.

உடனே யாவரும் வியக்கும் வண் ணம் "கண கண" என்று மணிகள் ஒலிக்க திவ்யமான தேவ விமானம் ஒன்று வந்து பூனையை ஏற்றிச் சென் றது. பூனையை எதிர் கொண்டு வர வேற்ற தேவேந்திரன், கற்பக மரத்தை வலம் வந்து வணங்கி, 'நீ பூ உலகு சென்று சுப்ரதீபன் வார்த் தையை மெய்ப்பித்துவிட்டு இங்குத் திரும்புவாயாக' என்று வேண்டினுன் அத்துடன் வேதஸிததன் என்ற தூது வனையும் பூனையுடன் சென்றுவர உத் தரவு இட்டான். இதனைக் கண்டு வியந்த இந்த்ராணி இந்த்ரனிடம் 'தாங்கள் ஏன் இப்படி இந்தப் பூனைக்கு இத்தகைய வரவேற்பும் உப சரிப்பும் செய்கிறீர்கள்' என்று கேட் டாள். அதற்கு இந்த்ரன் இந்த்ரா ணிக்கு ருத்ராட்சத்தின் சிறப்பை உப தேசித்து ஒரு நிகழ்ச்சியையும் உதா ரணமாகக் கூறினுன. அதாவது ஒரு சமயம் பூ உலகில் கலிங்க தேசத்தில் வ்யாக்ரபுரம் என்ற இடத்தில் ஒரு மஹா பாபி இருந்தான். பலவித பாபஙகளையும் புரிந்த அவன் தனது தநதையைக கூடக் கொலை செய் தவன். அவன ஒரு சமயம் திருடிய தற்காகப் பிடிபட்டு கிராம காவலர் களால் அடித்துக் கொல்லப்பட்டான்.

அவனை யம தூதர்கள் நரகத்துக்கு அழைத்துச் சென்றனர். ஆனுல் உடனே அப் பாபியை சிவகணங்கள் கயிலைக்கு மீட்டுச் சென்றனர். சித்ர குப்தனும், யமனும் சிவகணங்களின்

விட்டது. அரசனது மனைவியான வசுமதி என்பவள் தன் குல குருவின மனைவியான ஸத்யவிரதை எனபவ ளின் அறிவுரைப்படி ஒரு ருத்ராட் சத்தை வைத்து அதையே சிவபிரா ஞக பாவித்து வழிபட்டு வந்தாள். வசுமதியின் பிரார்த்தனைப்படி அரசன் அக்ஞானம் விலகி ஞானம் பெற்றுன். எதிரிகளையும் முறியடித்து நாட்டைத் திறம்பட ஆண்டான். இவையனைத்துக்கும் காரணம் தன் மனைவியின்சிவபக்தியே என்றுணர்ந்து தானும் இறைவனை வழிபட்டு வந் தான். இவ்வரசனுக்கு அதிரதன், அவிரதன் என்ற இரண்டு புதல்வர் களும், ஸர்வகலா(க்ஞா) சித்ராங்கனு என்ற இரு பெண் குழந்தைகளும் உணடு. இதில் ஸர்வகலா தன் தாய் வசுமதியைப் போலவே சிவ பெருமானின் பூரண அன்புக்குப் பாத்திரமாக விளங்கினுள். ருத்ராட் சத்தை சிரத்தையுடன் வழிபட்டு வந்தாள்.

அழகும் அறிவும் நிரம்பிய ஸர்வ கலாவை கேரளதேசத்தை அப்போது ஆண்ட ப்ரம்மனுதன் மகன் கமலா க்ஷன் விரும்பிமணந்தான்.கமலாக்ஷனை மணந்த ஸர்வகலா தன கணவன் உட லில் ருத்ராட்சமே அணியாமல் இருப் பது கண்டுவருந்தினுள். கணவனிடம் ஆனுல் கமலாக்ஷன் அறவே மறுத்து விட்டான். ஸர்வகலாவும் கமலாக்ஷன் ஒரு ருத்ராட்சம் மட்டுமாவது அணிய வேண்டும் என்றும், அவ்விதம் ருத்ரா ட்சதாரணை செய்து கொள்ளாவிட் டால் தன்னைத் தீண்டக்கூடாது என் றும் உறுதியாகக் கூறிவிட்டாள். உடனே கமலாக்ஷன் ருத்ராட்சம் அணிவது என்பது உலகில் மஹத் தான தலை சிறந்த விரதமாகும் என்று தனக்குசமானமானபண்டிதன்ஒருவன் கூறினுல்அணிந்துகொள்வதாகவாக்கு அளித்தான் ஸர்வகலாவும் அதற்குச் சம்மதித்துப்பலபண்டிதர்களைக் கூட்டி வைத்து 'இதில் யாரைத் தாங்கள் தங்களுக்குச் சமமாகக்கருதுகிறீர்கள்' என்று கணவனிடம் கேட்டாள்.

கமலாக்ஷன் ஸர்வகலாவிடம் இவர் களில் யாரையுமே நான் எனக்கு சமானமாகக் கருதவில்லை என்றும் அங்கு அரசவையில் உள்ள சுவற்றில் கிடந்த கோலத்தில், சயனித்து இருக் கும் திருமாலின் ஓவியத்தை சுட்டிக் காட்டி, அவரையே தனக்குச் சமான மாகக் கருதுவதாகவும் தெரிவித் தான். அவ்விதம் திருமால ஓவியத் தில் இருந்து எழுந்து வநது கூறினுல் தான் ருத்ராட்சம் அணியச் சம்மதிப் பது மட்டுமின்றி இந்த ஆண் வடி வத்தை விட்டுப்பெண் உருக்கொள்ள உடனே ஸர்வகலா தான் சபைமுன்பு திருமாலை வரவழைக்காவிட்டால் முக்கண் இறைவனது பெருமைக் கும் களங்கும் என்று கருதினுள். சிவபிரானையும் திருமாலையும் மனதார வணங்கித்துதித்தாள். பிறகு, 'நான் இதுவரை சிவபிரானை மனதார உபா சித்து வருவது உண்மையானுல் நாரா யணு ! தாங்கள் இந்த ஓவியத்தில் இருந்து எழுந்து வந்து இவருக்கு ருத்ராட்சத்தின் பெருமையை எடுத் துரைப்பீர்களாக !' என்று கூறினுள். இதைக் கேட்ட மஹாவிஷ்ணு ஓவி யத்தில் இருந்து எழுந்து வந்து கமலா க்ஷனிடம் "ருத்ராட்சத்தை அணி வது என்பது மஹத்தான புண்யத்தை தரும் தலைசிறந்த விரதமாகும். இதனை அணிபவர்கள் ஸ்ரீ பர மேஸ்வரனுக்கு சமானவர்களே" என்றும் அறிவித்துவிட்டு பழையபடி ஓவியமாக மாறிவிட்டார்.

உடனே பிரதிக்ஞைப்படி கமலா க்ஷன் பெண் உருப் பெற்று கமலாக்ஷி யானுள். இதனைக் கண்ட ஸர்வகலா சிவபிரானைத் தியானித்து "ஸர்வ கலாவல்லபன்" என்ற பெயரில் ஆணுக மாறிவிட்டாள். இருவரும் கருத்தொருமித்து வாழ்ந்துவந்தனர். இருப்பினும் இந்நிகழ்ச்சியால் மனம் வருந்திய ப்ரும்மநாதன் தனது மற் ருெரு மகன் விபுதனை யுவராஜாவாகச் செய்து அவனுக்கு ஸர்வகலா (க்ஞா) வின் தங்கை சித்ராங்கனுவைத் திரு மணம் செய்து வைத்து மகிழ்ந்தான்.

ஸவிதாதேசம் என்று அழைக்கப்பட்ட ஸௌராஷ்டிர தேசத்தை ஆண்ட விந்துஸேனன் என்ற மன்னன் ருத்ராட்சத்தின் மஹிமையால் நன்மை பெற்றான். விந்துஸேனன் தன் எதிரி அரசனை விந்த்ய தேசத்தை ஆண்ட சிம்மன் என்பவனை வென்று காட்டுக்குத் துரத்தினான். சிம்மன் விஷ்ணுவைக் குறித்து தவம் செய்து வரமாக சக்ராயுதத்தைக் கேட்டான். விஷ்ணுவும் அதன்படி சக்ராயுதம் அளித்தார். ஆனால் அதனை ஐந்து தடவை பிரயோகித்தப் பிறகு தன்னை வந்தடைந்துவிடும் என்று கூறி மறைந்தார். சிம்மன் உடனே விந்துஸேனன் மீது படை எடுத்தான். சக்ராயுதத்தால் பலரையும் அழித்தான். சிந்துஸேனன் மட்டும் தப்பி ஓடினான். வசிஷ்டர் முதலிய முனிவர்கள் இருப்பிடத்தை அடைந்த சிந்துஸேனன் விபரம் கூறினான். முனிவர்கள் சிரித்தவாறே விந்துஸேனனது கழுத்தில் இருந்த ஒரு ஆபரணத்தினுள் ருத்ராட்சம் ஒன்று இருப்பதைக் காட்டி அதன் மஹிமையால் தான் நீ உயிர் பிழைத்தாய் என்று தெரிவித்தார்கள்.

பிறகு விந்துஸேனன் முனிவர்களின் அறிவுரைப்படி மீண்டும் படை திரட்டினான். படை வீரர்கள் அனைவருக்கும் முனிவர்கள் விபூதியைக் கொடுத்து உடல் முழுவதும் பூசச் செய்தார்கள். படைத்தலைவர்கட்கு ஆபரணங்களில் ருத்ராட்சத்தை வைத்து அணிவித்தார்கள். பிறகு சிந்துஸேனனது தலைமையில் படை புறப்பட்டது. சிம்மனும், சிந்துஸேனனும் கடும்போர் புரிந்தார்கள். சிம்மன் பல முறை சக்ராயுதத்தை பிரயோகித்தும் அது எதிரியின் படைகளை எதுவும் செய்யவில்லை. இதற்குக் காரணம் சிவ சின்னமாகிய விபூதியை எதிரிப் படை பூசி இருப்பது மட்டுமே என்று எண்ணிய சிம்மன் வருண பகவானை த்யானித்தான். வருணன் எதிரிகள் மீது மழை பொழிந்து திருநீற்றை அழித்தான். அவர்களைக் கொன்றது. ஆனால் ருத்ராட்சம்தரித்தவர்களைக் கொல்லாது வலம் வந்தது. இவ்விதம் ஐந்து முறை பிரயோகித்த பிறகு சிம்மனது சக்ராயுதமும் திருமாலைச் சென்றடைந்தது. இதன் பிறகு சிம்மனும் சிந்துஸேனனும் சமாதானம் செய்து கொண்டார்கள். இருவருக்கும் முனிவர்கள் ருத்ராட்சத்தின் பெருமையையும் சிவ பக்தியின் சிறப்பையும் உபதேசித்தனர். இரு அரசர்களும் அதன்படி வாழ்ந்து முக்தி பெற்றனர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ருத்ராட்சத்தின் மஹிமையை விளக்கும் கதைகளை ஸ்காந்த புராணம் உப தேச காண்டம் எடுத்து உரைக்கிறது. இந்த பதிமூன்றாவது அத்யாயத்தைப் பாராயணம் செயவதே ஸகல க்ஷேமங்களையும் தரும் என்று கூறப்படுகிறது. அதாவது இதில்,

"ருத்ராக்ஷ மாலயா ஜபதோ மந்த்ரோ
ஊனந்த பலப்ரத:
அருத்ராக்ஷ ஜப: பும்ஸாம் தாவன்
மாத்ர பலப்ரத:
யஸ்யாங்கே நாஸ்தி ருத்ராக்ஷ
ஏகோபி பஹுபுண்யத:
தஸ்ய ஜனம நிரர்த்தம் ஸ்யாத்
த்ரிபுண்ட்ர ரஹிதம் யதா"

என்று கூறப்படுகிறது. ருத்ராக்ஷமாலையை அணிந்து ஜபம் செய்வது அளவற்ற பலனைத் தரும் என்றும், ஒரு ருத்ராட்சமாவது உடலில அணிய வேண்டும என்றும், ருத்ராட்சத்தை தலையில் அணிந்து ஸ்னானம் செய்தால் கங்கா ஸ்னான பலன் எனவும், விபூதி பூசாதவன், ருத்ராட்சம் அணியாதவன் இவர்களது பிறவியே பயனற்றதாகும் எனறும் இந்த காண்டத்தில் கூறப்படுகிறது. தவிர ஆயிரம் ருத்ராட்சத்தை உடலில் தரிப்பதை மிகச் சிறந்த வ்ரதமாகக் கூறுகிறது. அல்லது ஒரு கைக்கு பதினாறு விதம் இரண்டு கைகளிலும் அணிந்தும் ஒவ்வொரு மணிக்கட்டிலும் பன்னிரண்டு விதமும், தலையில் ஒன்றும், இரு காதுகளிலுமாக சேர்த்து பன்னிரண்டும், கழுத்தில் சங்களையும் ஆக மொத்தம் 101 ருத்ராட்சங்களை அணிவதை ஸ்காந்த புராணம் மிக உயர்வாகக் கூறுகிறது. தவிர முத்து, பவழம், தங்கம், வெள்ளி, ஸ்படிகம் இவைகளை ருத்ராட்சத்துடன் சேர்த்து அணிவது சாலச் சிறந்தது.

ஒன்று, ஐந்து, பதினைந்து முகங்களை உடைய ருத்ராட்சம் பூஜைக்கு உகந்தது என்று கூறப்படுகிறது. இத்தகைய அருளும் சக்தி உடைய ருத்ராட்சம் வேறில்லை. ஸ்ரீ ருத்ரன் வேறில்லை. இவ்விதம் கருணைக் கடலாக ஸ்ரீ பரமேசுவரன் உள்ளதால் தான் ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகி முனிவரும் "நான்யம் பச்யாமி பைஷஜ்யம் அந்தரேண வ்ருஷத்வஜம்" என்று குறிப்பிடுகிறார். அதாவது ஸம்ஸார ரோகத்துக்கு சிவாராதனத்தைத் தவிர வேறு வழி இல்லை என்பதாகும். காஷ்மீரக் கவியான லோஷ்டதேவர் என்பவரும் தனது திருக்ரந்தனம் என்ற நூலில் கீழ்கண்டவாறு குறிப்பிடுகிறார். அதாவது,

"கிம் ப்ராக ஸம்ஸ்துத அதி பன்ன
மூல:
சாயம் கத ச்ரமருஜம் ந தரு:
கரோதி"

என்பதாகும். 'நிழலைத் தரும் பெரிய மரமானது பயணிகளின் சிரமத்தைப் போக்குகிறது. நீ முன்புஎன்னிடம்பழகாதவன், அதனால் உனக்கு நிழலைத் தரமாட்டேன் என்று புதிதாகவரும் பயணியிடம்கூறுகிறதா இல்லையே அது போல விச்வேச்வரா! நான் இதுவரை தங்களை வணங்கித் துதிக்க மறந்தேன் எனற காரணத்துக்காக என்னைத் தற்போது கைவிட்டுவிடாதீர்கள்' என்று வேண்டுகிறார். எனவே நாமும இதுவரை ஜகத்பிதாவான சிவபிரானை வழிபடாது நாட்களைக் கழித்து இருந்தாலும் இனியாவது எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய அப்பெருமானின திருவடிகளைப் போற்றுவோமாக.



#  காலமும் விதியும் 

இலங்கையின் வீதிகள் விழாக் கோலம் பூண்டிருந்தது.

இந்திரனை வென்று, அவனோடு வரும் மேகநாதனை வரவேற்க, தண்டகாரண்யத்திலிருந்து வந்திருந்தார்கள் மாரீசனும் சுபாகுவும்.

"காராளா! அக்னியை ஏன் அடிக்கிறாய்? அவன் தேவனல்லவா?" என்றான் மாரீசன்.

"தேவனென்றாலும் நம் அடிமையல்லவா மாரீசரே இவன். அவன் செய்த வேலையைப் பாருங்கள்", என்று காலைத் தூக்கி காட்டினான் காராளன.

"அடடா. கொப்புளித்துவிட்டதே. அரக்கர் குலத்தையே தீண்டும் அளவுக்கா இவனிடம் தைரியம் இருக்கிறது. சரி காராளா, இவனை இராவணன் சமூகத்திற்கு இழுத்து வா". என்று சொல்லி விட்டுப் போனான் மாரீசன்.

"பிரதாப லங்கேசா வாழ்க!" என்ற கோஷத்துடன் வந்த சாரணன் லங்கேசனைப் பணிந்து நின்றான்.

"சாரணா! கும்பகர்ணன் எழுநது விட்டானா?"

"இன்னும் இல்லை பிரபு"

"மேகநாதன் இந்திரனோடு வந்து கொண்டிருப்பதாய் செய்தி வந்திருக்கிறது. சீக்கிரம் கும்பகர்ணனை எழுப்பி அலங்கரியுங்கள்" என்று ராவணன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அக்னியுடன் வந்து நடந்ததைச் சொன்னான் காராளன்.

"அடிமைக்கு இவ்வளவு திமிரா? அவனை அடக்கத் திறமில்லாமலா இங்குக் கொண்டு வந்தாய்?" என்று பொருமினான் ராவணன்.

செல்வி. டி. ஆர். மேகலை,
செங்கல்பட்டு.

"நான்தான் ராவணா அவனை இங்கே கொண்டு வரச் சொன்னேன். இந்த அக்னி எல்லாவற்றையும் எரிப்பவன் தானே? இன்று இவனையே எரித்து நம் குமாரனின் வெற்றியைக் கொண்டாடலாமே."

"ஆகா அற்புதம் மாமா, உன யோசனை." என்று மாரீசனைப் புகழ்ந்தான் ராவணன்.

"மகாராஜா! எனக்கொரு சந்தேகம். இவனே நெருப்பு. இவனை எந்த நெருப்பால் எரிப்பது?" என்றான் சாரணன்.

"தசமுகன் நினைத்தால் இதுபெரும் காரியமே இலலை சாரணா. மன்மதனை எரித்த நெற்றிக்கண்ணை இவன்மீது திருப்பினால் ... எரியும நெருப்பும் குளிர நீராகி விடாதா?" என்று சிரித்தான் மாரீசன்.



மாரீசனின் யோசனை பிடிக்காத விபீஷணன் அதைத் தடுக்க முயன்றான். ராவணன் அதைக் கேட்காமல்,

"காராளா! அக்னியை கொண்டு போய் ஆண்டவன் சன்னதியில் நிறுத்து", என ராவணன் சொல்லிக்

கொண்டிருக்கும்போதே, "மகாதேவ—மகாதேவா" என்று சொல்லிய படி நாரதர் அங்கு வந்து சேர்ந்தார்.

நாரதர் வருகை பிடிக்காத மாரீசன் முகத்தைச் சுளித்து, "ராவணா! இந்தக் கலகக்கார பேர்வழி இப்போது இங்கு வந்திருப்பது நல்லதற்கல்ல என்றே எனக்குத் தோனறுகிறது" முணுமுணுத்தான.

"லங்கேசா! உன் மகனின வெறறியைக் கேட்டு சத்திய லோகமும் பிரம்மலோகமும் நடுநடுங்கிக் கிடக்கிறது. அட, மாரீசனா? தணடகாரணயத்திலிருந்து எப்போது வந்தாய்? ராவணா! இதென்ன விபரீதம்? அக்னியைக கட்டி நிறுததியிருககிறாய்?" என்றார் நாரதர்.

'ஆம் நாரதரே! அகனியை எரிதது மேகநாதனின் வெற்றியைக கொணடாடப் போகிறோம். இருநது பாருங்கள்" என்று சிரித்தான ராவணன்.

"சிவ சிவ" என்று காதுகளைப் பொத்திக் கொண்ட நாரதர், "இந்த யோசனையை உனக்குச் சொன்னது யார் ராவணா? சிவனின் பரம பக்தனா நீ இந்த அபச்சாரத்தைச்செய்யலாமோ?" என்றார்.

"அபச்சாரமா? நாரதரே நீர்என்ன சொல்கிறீர?"

"ராவணா! அக்னிககு பிறப்பிடம ஐயனின கையிலிருக்கும் காயழல் தான என்பது தெரியதா உனக்கு. அதை நீ அணைத்து விடப்போகிறாயா? சிவனின திருச்சன்னதியில் எரியும் தீபத்தையே நீ இப்போது அணைக்கப் போகிறாயா?" என்றார் நாரதர்.

நாரதர் சொன்னதைக்கேட்டு சினம் கொணட ராவணன், "மாமா! உன் வம்சத்தை புரிந்து கொள்ளாமல் எவ்வளவு பெரிய தவறு செய்ய இருந்தேன். காராளா, அவிழ்த்து விடு அக்னியை, இனி யாரும் அவனை விரலாலும் தீண்டக் கூடாது. நாரதரே? உம்மிடம் ஒரு காரியம் ஆக வேண்டும்"

"எதுவானாலும் சொல ராவணா! முடித்து வைக்கிறேன்",

"என் மூவுலக ஆட்சி முழுமை பெற வேண்டுமானால நான் ஹரியையும் வெற்றி கொள்ள வேண்டும்."

"அவ்வளவு தானே? எவ்வளவு சீகிரம் முடியுமோ அவ்வளவு சீககிரம உங்கள் இருவரையும் எதிரெதிராக நிறுத்துகிறேன்" என்ற நாரதா.

இடம்; வைகுந்தம்.

"நாராயணா...நாராயணா" என்ற படி வைகுணட வாசனிடம் வந்து "தேவ தேவா! போதும் உங்கள் பாசாங்குத் தூககம் நான் ராவணனுக்கு வாக்களித்து விட்டேன்" என்றார்.

"அது நிலைககும.காலத்தையும் விதியையும் ஒன்ற வைப்பது உன்னுடைய பொறுப்புதானே நாரதா! காலத்தோடு நீ இப்போது விதியை ஒன்ற வைக்கவேணடும். அந்த விதி பிரகஸ்பதியின் ஆஸ்ரமத்தில் வேதவதி என்ற பெயரில் கசனின் மகளாய் வளர்நதிருக்கிறாள். அவள் என்னையே தன பதியாக வரித்துக் கொண்டுவிட்டாள். ஆனால் அதற்கான பக்குவத்தை அவள் இனனும் அடையவில்லை. அவள்தான் மறுபடியும் பூமியில் அறம் தழைக்கவும் தர்மம் நிலைக்கவும் காரணமாகப் போகிறாள. அவளது காதலையும், காலத்தையும கனிய வைக்கும் பணி உன்னுடையதுதான். போய் வா!" என்றா மகாவிஷ்ணு.

வேதவதி நாராயணன் மேல்உள்ள தன காதலை வெளியிட்டுப் பேசிக் கொண்டிருக்கிறாள். அப்போது, "நீ விருமபுவது எதுவாயினும் அது உனக்குக் கிடைக்கட்டும்" என்று சொல்லிக்கொண்டே அங்கு வருகிறார் நாரதர்.

"ஆகா! பாக்யம் செய்தேன் நாரத மகரிஷே! வாருங்கள்" என்று நாரதரை வரவேற்றாள் வேதவதி.

"வேதவதி? நான் வரும்போது யாருடனோ பேசிக் கொண்டிருந்தாய். இப்போது ஒருவரையும் காணவில்லையே" என தான் வந்த வேலையைத் துவக்கினார் நாரதர்.

வேதவதி வெட்கத்துடன் நாராயணனின் விக்கிரகத்தைக் காட்டினாள்.

நாரதர் சிரித்து, 'வேதவதி உன மனம் எனக்குப் புரிநதது. இன்னும் நீ பிரகஸ்பதியின ஆஸ்ரமத்திலிருநதபடியே பிரபுவின் விககிரகத்துடன பேசினால் மட்டும் உன் ஆசை நிறைவேறி விடுமா? நேராக வைகுண்டம் போய், 'அடியாளை பததினியாக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கேட்டால் அந்தக் கணமே உன் ஆசை நிறைவேறி விடுமல்லவா?" என்றார். வேதவதி யோசித்தாள்..

"வேதவதி நீ எதைப்பற்றி யோசிககிறாய் என்பது புரிநதது. உன் பாட்டன் பிரகஸ்பதி நினைத்தால் வைகுணடம் போவது அதததை கடினமே அல்ல" என்று நாரதர் சொலலிக் கொணடிருககும் போதே பிரகஸ்பதி, "வரவேண்டும் மகரிஷே வரவேணடும்" என்றபடி வநதார்.

"தாத்தா! எனனை வைகுண்டம அழைத்துச்செல்லுங்கள். எனனை ஏற்றுக கொள்ளும்படி வைகுண்டவாசனிடம் நேரிலேயே போய கேட்கப் போகிறேன்" என்றாள் வேதவதி.

"சர்வததுக்கும் சாட்சியாய் இருக்கும் அந்த வேதநாயகனிடம நீ நேரில் போய கேட்டுத்தான் உன் கோரிக்கை நிறைவேற வேணடுமா வேதவதி?"

"நாராயணனின் திருவுளம அதுவானால—நாம என்ன செய்ய முடியும் குருதேவரே?" என்றா நாரதா.

"அப்படியானால முறைப்படி எல்லாம் செய்வோம் வேதவதி. சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக்கொண்டு அசுரா நாட்டிலிருநது கசன் கிளம்பி விட்டான். அதனபின் நீ கசனுடன் வைகுண்டம் போகலாம்" என பிரகஸ்பதி வேதவதியிடம் சொன்னார்.

வேதவதி உடனே வைகுண்டம் போவதற்கான ஆயத்தங்களை செய்து கொண்டிருந்தாள்.

''வேதவதி! வைகுண்டம் போவதற்கான ஆயத்தமா?

'ஆம தாததா'

''அது சரி, இது என்ன மூட்டை?''. வேதவதி மிகவும் பாதுகாப்பாக வைத்திருந்த சிறு மூட்டையை காட்டிக் கேட்டார் பிரகஸபதி.

''என் பதிககு நான் கொண்டுசெல்லும் சீதனம் தாத்தா. கங்கா தேவியிடமிருநது ஒரு சங்கு, ஒரு பாரிஜாத மலர் மாலை. தாத்தா! இதென்ன உங்கள்முகம் இப்படி விகாரமாகிறது. தாத்தா! நான் போனால் நாராயணமூர்த்தி என்னை ஏற்றுக் கொள்வாரா?'' என்று வேதவதி தன்னை நினைத்துக கலங்க பிரகஸ்பதி, 'கசா உனக்கு அதுவா விதி?' எனறு முணு முணுத்தார்.

''தாத்தா! அப்பாவுககு என்ன ஆயிற்று?'' என வேதவதி கேட்க,

''பிரகஸ்பதி பகவானே! உங்களின தெளிநத அறிவுககுமா கலக்கம்?'' எனறார் நாரதர்.

''புத்திர சோகமல்லவா நாரதரே, அது யாரைவிட்டு வைத்திருக்கிறது''

''தாத்தா! அப்பாவுக்கு என்ன ஆயிற்று?''

''வேதவதி! உன்னை அழைததுச் செல்ல கசன வரமாட்டான. நீ இப்போது வைகுண்டம் போகமுடியாது'' என்றார நாரதர்.

''அதுதான் ஏன என்கிறேன சொல்லுங்கள் மகரிஷி''.

''வழியில் சம்பாசுரன் என்ற அசுரன் உன் தந்தையைக் கொன்று விட்டான்''

'ஐயோ'

''உன்னைத் தனக்கு மணம் செய்து தரும்படி சம்பாசுரன் கேட்டான். கசன் மறுதது விட்டான. சம்பாசுரனின் கோபத்தோடு தேவாசுர குலங்களின் இயற்கையான பகையும் சேர்ந்தது. கசனின கதை முடிநது விட்டது''

''புரிந்தது மகரிஷே! எங்கே நான் வைகுண்டம் வந்து விடுவேனோ என்று அந்த சர்வலோக நாயகன் இந்த அநியாயம் நடக்க விட்டு விட்டார். இருந்தாலும் என் பிரபுவை நான் விடமாட்டேன். அவரைத் தேடி நான் போகாவிட்டால என்ன? அவர் என்னைத் தேடி வரும்படிச் செய்கிறேன். நான் இப்போதே விந்திய மலைச்சாரலுக்குப் போகிறேன. எத்தனை ஜன்மங்களானாலும் என் ஸ்வாமி எனனைத் தேடி வரும்வரை தவமிருப்பேன். அசுரர்களின் குல நாசத்திற்கு என்றும் நானே காரணமாவேன். தாத்தா! என்னை ஆசிர்வதியுங்கள். மகரிஷி நீங்களும் என்னை ஆசிர்வதியுங்கள். நான் வருகிறேன்'' எனறு வேதவதி கூளுரைத்து விட்டுச் சென றாள்.

எண்ணி வந்த காரியம் கைகூடிய திருப்தியில் பிரகஸ்பதியின ஆசிரமத்திலிருந்து கிளம்பிய நாரதர், இலங்கைக்குச் சென்று ''ராவணேஸ்வரா! உனக்கு இது தகுமா? நீ இப்படிச் செய்யலாமா?'' எனப் பதறினார்.

'வரவேண்டும் நாரதரே! ஏனிந்த படபடப்பு?'

''ராவணா! ரம்பை குபேர மைநதன நளகூபரனின பததினி எனபது உனககுத தெரியாதா? நடனத்துக குப்பின நீ அவளிடம நடந்துகொணட முறை சரியில்லை. ரம்பையின அலங்கோலத்தைக கண்ட நளகூபரன், ''அயலான் மனைவிமீது கொள்ளும் இச்சையே தசமுகனை அழிக்கட்டும்'' எனச் சாபமிட்டு விட்டான்''

''நாரதரே! நளகூபரனின் சாபம் என்னை ஒன்றும் செய்யாது. இதற்கான நா ஒன்றும வருநத வேண டாம்''.

''லங்கேஸ்வரா! மூவுலகையும் அடக்கி ஆளும் சக்தி பெற்றிருக்கிறாய். அறிவும் மனோபலமும் பெற்றிருக்கிறாய். இருந்தும் அல்ப விஷயங்களில் அந்த அறிவு உனக்குப் பயன் படாமல் போவதேன்?''

''நானும் உம்மைப் போல் வரட்டுத் தவசியா நாரதரே, போகங்களை துய்ககாமல் விடுவதற்கு. அது இயற்கையின் இயல்புதானே? அது சரி எனக்களித்த வாக்கை நீர் எப்போது நிறைவேற்றப் போகிறீர்?''

''அதற்காகத்தான் ராவணா நான் முயன்று கொண்டிருக்கிறேன். என்ன இருந்தாலும் நீ பரஸ்திரிகளின் விஷயத்தில் மனதை அலைய விடுவது நலலதல்ல. நான் வருகிறேன்''

''நில்லும் நாரதரே, இன்று மாத சிவராத்திரி. நானும் மண்டோதரியும் சிவபெருமானுக்கு அபிஷேக ஆராதனை செய்யும் புனித தினம். வாரும் ஐயனை தரிசிக்கப்போவோம்''

''இல்லை ராவணா! நான் வேறு முக்கிய காரணமாய செல்கிறேன. இன்னொரு சமயம் வந்து''... என நாரதர் முடிக்கும் முன, ''அப்படியென்ன தலைபோகிற அவசரம் நாரதரே! அதுவும் தவசியான உமக்கு?'' என்றான் ராவணன

''பிரகஸ்பதியின் மகன் கசன. அவன மகள் வேதவதி. அவள்தவம் செயய விந்திய மலைக்கு வந்திருக்கிறாள். அவளை நீ பாாததில்லையே ராவணா? அப்பப்பா—என்ன அழகு! அவளது அழகுக்கு அன்னை பார்வதியும் ஈடாக முடியாது. அந்த அழகு சௌந்தர்யத்தைத் தரிசிக்கவே நான் போய்க் கொண்டிருந்தேன். வழியில் நளகூபரனின சாபம் காதில் விழுந்தது, உன்னை எச்சரிக்கவந்தேன். சரி, நான் வருகிறேன்'' என்று வந்த வேலையைத் துவக்கினார் நாரதர்.

(28-ம் பக்கம் பார்க்க)



# கொங்குப் பிராட்டியார்

**கொங்கு நாட்டின் சிறப்பியல்புகள் :**

"வடக்குப் பெரும்பாலை வைகாவூர்
தெறகு
குடக்குப் பொருப்பு வெள்ளிக்குன்று—
கிடக்கும்
களத்தண்டலை மேவும காவிரி சூழ்
நாட்டுக்
குளித்தண்டலை அளவு கொங்கு"

எனபது கொங்கு மண்டல சதகச் செய்யுள். கொங்கு நாட்டின் எலலைகளைக் குறிப்பிடுவதற்காக இந்தச் செய்யுள் பாடப்பட்டது. கொங்கு நாட்டின் வடக்கு எல்லை பெரும்பாலை, தெற்கு எல்லை வைகாவூர் என்று அழைக்கப்படும் பழநி. கிழக்கு எல்லை குளித்தலை. மேற்கெல்லை வெள்ளிமலை என்பதை இப்பாடலின் மூலம் அறியலாம்.

சங்க காலத்தில் வாழ்ந்த கடையேழு வள்ளல்களில் பெரும்பாலோரை ஈன்றெடுத்த பெருமை இக கொங்கு நாட்டையே சேரும். கொங்குநாட்டில் சிறப்புப் பெற்ற மலை கொல்லிமலை. இதனைச் சொந்தமாக்கிக் கொள்ள சேர மனனர்களுக்கும் சோழ பாணடிய மனனாகளுக்கும் அவ்வப்போது போாகள் நடநதுள்ளன. ஆகவே தொடக்கத்தில் குறிப்பிட்ட எல்லைகள அவவப்போது விரிவடைநதும சுருங்கியும வந்துள்ளன.

| | | |
|---|---|---|
| கிழககில் | — | சேர்வராயன் மலை, கொல்லி மலை. |
| மேற்கில் | — | நீலகிரி, வெள்ளி மலைத் தொடர். |
| வடக்கில் | — | பர்கூர், தலைமலை, தொப்பூர் மலைகள். |
| தெற்கில் | — | ஆனைமலை, வராக மலைகள். |

இவ்வெல்லைகளுக்கு இடைப்பட்ட தாழ்வான நிலப்பகுதியில் காவிரி அன்னை தவழ்ந்தோடி வளம் பெருக்குகிறாள். காவிரியில் கலககும் ஆறுகள் பவானி, நொய்யல், அமராவதி, திருமணி முத்தாறு திருமணி முத்தாற்றினால் இனறு பயன ஏதும் இல்லை. இவவாற்றில இன்று சேலம் நகரச் சாக்கடை கலககிறது.

சேர சோழ பாண்டிய நாடுகளைப் போலவே கொங்கு நாடு என்று ஒரு நாடு இருந்தது என்பது நவீன வரலாற்று ஆசிரியர்களின் வாதம். கொங்கு நாட்டை சங்க காலத்தில் 'கோசர்கள்' என்றழைக்கப்படும் பிரிவினர் ஆண்டு வந்தனர். இதனை சங்க இலக்கியங்களும் சிலப்பதிகாரமும் கூறுகினறன.

திரு. பா. அன்பரசு, M.A., M.Ed. D.J.,
சேலம்.

கொங்கு நாட்டை ஆண்ட கோசர்கள் வாய்மொழி தவறாதவர்கள. இவர்கள் முடிவேந்தர்களுககு அவ்வப்போது போர்க் காலங்களில் துணையாக இருந்து வந்தார்கள். 'காங்கேயர்கள்' என்னும் ஒரு பிரிவினரும் இக கொங்கு நாட்டில் இருந்து ஆட்சி செய்தனர். காங்கேயாகளில் ஒருவராக விளங்கிய பொப்பணண காங்கேயர் எனபவர் அடியார்ககு நல்லார் என்னும் உரையாசிரியரை ஆதரித்து, சிலப்பதிகாரம எனனும நூலுக்கு உரை எழுதுவித்தார். இதனை,

"ஒரும் தமிழ ஒரு மூன்றும் உலகு
இனபுற வகுத்து
சேரன தெரித்த சிலப்பதி காரத்தில
சேர்ந்த பொருள
ஆரும் தெரிய விரித்துரைததான
அடியார்ககு நல்லான்
காரும் தருவும அனையான்
நிரம்பையர் காவலனே"

"காறறைப பிடித்துக் கடத்தில்
அடைத்துக் கடிய பெரும
காற்றைக குரம்பை செய்வாா செய்கை
போலும் அல்கால மெனனும்
கூற்றைததவிாத்தருள பொப்பண்ணா
காங்கேயர் கோன அளித்த
சோற்றுச் செருக்கல்லவோ தமிழ்
மூன்று உரை செய்வித்தே"

என்னும் சிலப்பதிகார உரைப் பதிகச் செய்யுள்களால் அறியலாம். முதல் பாடலில் வரும் நிரம்பையர்

காவலர்' என்பது அடியார்க்கு நல்லாரைக் குறிக்கும்.

பெருங்கதை என்னும் தமிழ்க் காப்பியத்தை இயற்றிய கொங்கு வேளிர் என்பவர் பிறந்த விசயமங்கலம் கொங்கு நாட்டில்தான் உள்ளது. இடைக்காலச் சோழ சாம்ராஜ்யத்தின விடிவெள்ளியாகத் திகழ்ந்த இராசராச சோழனுடைய வளர்ப்புத் தாயான செம்பியன் மாதேவி கொங்கு நாட்டு மழவர் தலைவன் ஒருவனுடைய மகள். இவ்வம்மையாரின் பெயரால் கொங்கு நாட்டில் 'செம்பியன் மாதேவி' எனறு ஓர் ஊரே உள்ளது.

புகழ்ச் சோழர், சிவகாமியாண்டார், எறிபத்தர் ஆகிய நாயன்மார்கள் தமது தொண்டினைச்செய்த பகுதியும், திருஞான சம்பந்தரும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும வருகை தநது சிறப்பித்த பகுதியும் இது ஆகும்.

கொங்கு நாட்டில் உள்ள சிவத் தலங்கள் ஏழும் 'கொங்கேழ் தலங்கள்' என்ற சிறப்பைப் பெற்றுள்ளன.

''கொல்லி காவலன கூடல் நாயகன்
கோழிக்கோன் குலசேகரன்'
என்றும்,
''கொங்கர் கோன் குலசேகரன'
என்றும்,
'கொல்லி நகர்க்கு இறை கூடல
கோமான குலசேகரன்'

என்றும் தன்னைக் கூறிக்கொள்ளும் குலசேகராழ்வார் வாழ்ந்த பகுதியும் கொங்கு நாடே எனறு அறியுமபோது கொங்கு நாட்டில பிறந்தவர் சறறுத் தலை நிமிர்நது நடக்கலாம்.

மேலே குறிப்பிட்ட செய்திகள் கொங்கு நாட்டின் சில சிறப்புகளே ஆகும். இவை போன்ற பல சிறப்புகள் இப்பகுதிக்கு உணடு.

**இராமானுசர் திருவுள்ளம் :**

இராமானுசர் வாழ்ந்த காலத்தில் சோழ நாட்டை ஆண்டவன் இருமி கண்ட சோழன். சமய வெறி தலைவிரித்தாடிய காலம் அது. விசிஷ்டாத்வைதத்தை(பக்தி இயக்கம்)நிலை நாட்டிய இராமானுசர் அப்போது திருவரங்கத்தில் வாசம் செய்து வந்தார்.



எம்பெருமானார் ஸ்ரீ இராமானுசர்.

'ஆவுரித்துத் தின்னுகின்ற புலையரேனும்
அவர் கண்டீர் யாம் வணங்கும்
கடவுளாரே'

என்னும் அப்பர் வாக்கையும், இழி குலத்தவர் என்று கருதப்பட்ட திருப்பாண் ஆழ்வாருக்கு அரங்கர் அருள் புரிந்த பான்மையையும், 'பிறப்பொக்கும் எலலா உயிர்க்கும்' என்னும் திருவள்ளுவர் குறளையும் அறிந்திருந்தார் இராமானுசர். இவற்றை எல்லாம் ஏட்டளவில் அல்லாது செயல்முறைப்படுத்தும் எண்ணம் அவரது திருவுள்ளத்தில் நீண்ட நாட்களாகவே இருந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வடலூரில் வாழ்ந்த இராமலிங்க வள்ளலார் சமரசக் கொள்கையை அவனிக்கு உணர்த்திய காரணத்தால் பிறருடைய ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளானார். இந்நூற்றாண்டில் சமத்துவத்தை ஏற்படுத்த அண்ணல் காந்தியும் எண்ணற்ற இன்னல்களை அனுபவித்தார். அப்போதும் தீண்டாமைப் பேயை அவனியிலிருந்து அகற்றிட இயலவில்லை.

கல்வியறிவு நிரம்பப் பெற்ற இந்த அறிவியல் சகாப்தத்திலே கூட சாதி வெறி தலைவிரித்தாடுகிறது என்று சொன்னால், இராமானுசர் வாழ்ந்த அந்த 11ஆம் நூற்றாண்டின் மன்னர் ஆட்சியில் அவருடைய சீர்திருத்தப் பணிகளுக்கும் அன்றைய சமுதாய அமைப்பில் எவ்வளவு எதிர்ப்பு இருந்திருக்கும் என்பதை ஒருவாறு நாம் ஊகித்து அறிய முடியும்.

திருக்கோட்டியூர் நம்பியிடம் தாம் பலமுறை நடந்து கற்ற எட்டெழுத்து மந்திரத்தை நாட்டு மக்கள் அனைவருக்கும் உரிமையாக்கினார் இராமா

னுசர். இதனல் அவருக்கு நரகம் ஏற்படும் என்று தெரிந்தும் மக்கள் அம்மந்திரத்தை உணர்ந்து மோட்ச உலகு அடையட்டும் என்ற ஒரே காரணத்திற்காக அவ்வாறு செய்தார். இன்றைய மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த மேல்கோட்டை திருநாராயணர் கோயிலில் இராமானுசர் அரிசன மக்களை ஆலயப்பிரவேசம் செய்ய வைத்தது உலகறியும். தன்னை ஈடேற்றிக் கொண்டதுடன் தன்னை அண்டிய அடிமட்டத்தில் உழலும் மக்களுக்கும் நல்வழி காட்டிய ஒரு சீர்திருத்தவாதியாவர் ஸ்ரீ இராமானுசர்.

அன்றைய சமயாச்சாரியர்களின போலி வாழ்க்கை இராமானுசருக்கு எள்ளளவும் பிடிக்கவில்லை. திருவரங்கம் பெரிய கோயிலில் அவர் காலத்தில் நடந்த சீர்கேடுகளைப் போகக முயற்சி செய்த இராமானுசரை சுவாமி தீர்த்தத்திலும், அன்றுடம் அவர் பிச்சை வாங்கி உண்ட உணவிலும் நஞ்சு கலந்து கொன்றுவிடத் திட்டம் போட்டனர் அன்றைய கோயில் நிருவாகிகள். ஆனல் அவர்கள் இட்ட நஞ்சு அவருடைய திட சிந்தையாலும், உடல் உறுதியாலும், பரம்பொருள் மீது அவர் கொண்ட பக்தியாலும் அவரை ஒன்றும் செய்ய இயலவில்லை.

## இராமானுசரின் கொங்கு நாட்டுப் பயணம்

இராமானுசரின் காலத்தில் கி.பி. 1070 ஆம் ஆண்டு வாக்கில் சோழ நாட்டை ஆண்டு வந்த அரசன் முதலாம் வீரராசேந்திர சோழனின் மகனுகிய அதிராசேந்திரன். விஜயாலயர் தோற்றுவித்த சோழ வம்சத்துக் கடைசி அரசர் இவரே ஆவர். இவர் ஆட்சி சில மாத காலமே நடந்தது.

சைவ சமயமே சமயங்களில் தலை சிறந்தது என்னும் கொள்கையை இவர் கொண்டிருந்தார். இவர் சமய ஆச்சாரியர்களின் பேச்சைக் கேட்டுக் கொண்டு 'சிவாம்பரதரம் நாஸ்தி' என்று ஓலையில் எழுதச் செய்து நாட்டிலுள்ள பண்டிதர்களிடம் கையெழுத்து வாங்கும்படி ஆணையிட்டார். இதனைக் கண்ட நாலூரான் என்பவர் மன்னரைப் பார்த்து, "யார் கையெழுத்திட்டாலும் என்ன பயன்? இராமானுசரும் கூரத்தாழ்வாரும் இதில் கையெழுத்திட்டால்தான் இவ்வோலை நிறைவு பெறும்" என்று கூறினர்.

நாலூரானின் அறிவுரையைக் கேட்ட சோழன் இராமானுசரை அழைதது வரும்படி ஆணையிட்டார். அரசனல அனுப்பப்பட்ட ஊழியர் திருவரங்கம வந்து உடையவர் மீடத தின் வாசலில வந்து நினறு "இராமானுசன் எங்கே?" என்று கோட்டார.

படிகொண்ட கீர்த்தி இராமாயணம என்னும் பக்தி வெள்ளம் குடிகொண்ட கோயிலாகிய இராமானுசர் அப்போது காவிரி ஆற்று வெள்ளத்தில் குளித்துக் கொணடிருநதாா அவருக்குக் கூரததாழ்வார் தணணீா முகந்து கொடுத்துக் கொணடிருந்தார். (இவர் இராமானுசரின் பவித்திரம் எனறு கருதப்படுவர். சொநத ஊர் கூரம்). அப்போது மடததிலிருநது ஓடி வந்த அடியார் கூரததாழ்வாரின் காதோடு காதாக "சுவாமி! உடையவரை அழைத்துச செல்ல சோழ மன்னரின் சேவகன் வந்துள்ளான். நமது மடத்தில் அமர்ந்திருக்கும்படிச சொல்லிவிட்டு வந்தேன்" என்று கூறினா.

இதைக் கேட்ட கூரத்தாழ்வார் இராமானுசரிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் அவர் கட்டிக் கொள்வதற்காகக் காவிரியின் கரையிலேயே வைத்திருந்த காஷாய ஆடைகளைத் தாம் தரித்துத் திரிதண்டத்தை எடுத்துக்கொண்டு மடத்திலிருக்கும் சோழ அரசனின் ஊழியனைக் காண ஓடினர்.





ஹனுமன் அரக்கர்களைக் கொல்வதும, ஹனுமன் சிதையிடமிருந்து சூடாமணி பெறுதலும்-ஸ்ரீசென்ன கேசவாலயக் கோயிற்-சிற்பங்கள்-காடிபக்கி.(ஆ.பி.)

அவருக்கு என்ன நேரப்போகிறதோ என்று பெரிய நம்பியும் (ஆளவந்தாரின் தலைமை மாணவர்) புறப்பட்டுப் போனார்.

நடந்ததைக் கேள்விப்பட்ட இராமானுசர் கூரத்தாழ்வாருடைய வெள்ளையாடையை வாங்கி உடுத்திக் கொண்டு, 'கூரத்தாழ்வாருக்கும், பெரிய நம்பிகளும் என்ன தீங்கு வரப் போகிறதோ' என்று கவலைப்பட்டார். இதைக் கேள்விப்பட்ட முதலியாண்டானும் (முதலியாண்டானின் இயற்பெயர் தாசரதி. இராமானுசரின் சகோதரியின் மகன். இராமானுசரது தண்டம் என்று கருதப்படுவர்). மற்ற அடியவர்களும் இனி திருவரங்கத்தில் உடையவர் இருப்பின் ஆபத்து நேரும் என்று உணர்ந்து உடையவரை அழைத்துக் கொண்டு சில அடியார்களுடன் திருவரங்கத்திலிருந்து வெளியேறினார்கள். சோழனுடைய காவலர்கள் இவர்களைப் பின் தொடர்ந்து வந்தனர்.

இதனை உணர்ந்த இராமானுசர் வரும் வழியிலிருந்த ஆற்று மணலை எடுத்து, "கொடுமை செய்யும் கூற்றமும் என் கோலாடி குறுகப் பெறு, தடவரைத தோள் சக்ரபாணீ! சார்ங்கவில் சேவகனே!" என்று கூறி அம்மணலை அடியவர்களிடம் தந்து வரும் வழியில் ஆங்காங்குத் தெளித்து வரும்படிக் கூறினர்.

அடியவர்கள் இராமானுசர் கூறிய படியே செய்ய, சோழனின் காவலர்கள், 'போகிற பிராமணர்கள் மணலைப் போட்டுக் கொண்டு போகிறார்கள' என்றுக் கூறித் தமது அரசனிடம் திரும்பினார்கள். இராமானுசரும் அடியவர்களும் திருவரங்கத்திலிருந்து வடமேற்குத் திசை நோக்கித் தமது பயணத்தைத் தொடர்ந்தார்கள். சோழநாட்டின் எல்லையிலிருந்து கடந்து சென்றுவிட வேண்டும் என்பது அவர்களுடைய திட்டம்.

இந்த இடத்தில் வாசகர்களுக்கு ஒரு விபரீதமான ஐயம் ஏற்படக் கூடும். 'சோழ அரசனுடைய அச் சுறுத்தலுக்கு அஞ்சி இராமானுசர் ஓடிவிட்டாரா?' என்பதே அது. இந்த ஐயம் சரியன்று. நமது சம காலத்தில் வாழ்ந்த தேசியக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் சென்னை சுதேசமித்திரன் நாளேட்டின் அலுவலகத்தில் விடுதலை உணர்வூட்டக் கூடிய தலையங்கங்களையும் செய்திகளையும் தீட்டியதை அறிந்த ஆங்கில அரசு அவரைக் கைது செய்யத் திட்டம் தீட்டியபோது அவர் எந்தக் காரணத்திற்காகப் பாண்டிச்சேரிக்குச் சென்று தலைமறைவாகி இருந்தாரோ அதேபோன்ற காரணத்திற்காகத்தான் இராமானுசரும் தமது அடியார்களுடன் சோழ நாட்டின் எல்லையைக் கடந்து கொங்கு நாட்டை அடைந்தார்.

காவிரி ஆற்றில் நீராடிக் கொண்டிருந்தபோது இராமானுசருடைய காசாய ஆடைகளையும், திரிதண்டத்தையும் எடுத்துக் கொண்டு சோழன் அரண்மனைக்குச் சென்ற கூரத்தாழ்வாரை இராமானுசர் என்று சோழ மன்னர் நினைத்தார். "சிவாம்பரதரம் நாஸ்தி" என்று எழுதப்பட்ட வாசகத்தின் கீழ் கையொப்பமிடும்படிக் கட்டாயப்படுத்த கூரத்தாழ்வார் "சிவாம்பரதரம் நாஸ்தி த்ரோணமஸ்தி தத: பரம்" என்று ஓலையில் எழுதிக் கையொப்பமிட்டார். இந்தச் செயலுக்காகக் கூரத்தாழ்வாருக்குக் கிடைத்த தண்டனை கண் இழப்பு. இதனை அறிந்து இராமானுசர் புழுவாய்த் துடித்துக் கண்ணீர் விட்டுத் தரையில் சாய்ந்தார் என்று குருபரம்பரை கூறுகிறது.

திருவரங்கத்திலிருந்து புறப்பட்ட இராமானுசரும் அவருடைய சீடர்களும் கொள்ளிடத்தைக் கடந்து அதன் வடக்குக் கரையை அடைந்து கொல்லிமலைச் சாரலின் மேற்குப்புறமாகப் பயணம் செய்தனர். அரசனது ஆட்களின் பார்வையிலிருந்து தப்பவே இந்தக் காட்டுத் தடத்தின் வழியாகப் பயணம் மேற்கொள்ளப் பட்டது.

மலைப்பகுதியில் இருந்து ஆறு காதம் (சுமார் 30 கல்) அவர்கள் பயணம் செய்ததாகவும் அங்கு வாழ்ந்த வேடர்கள் அனைவருக்கும் தேனும் தினைமாவும் தந்ததாகவும் குருபரம்பரை ஆறாயிரப்படி கூறுகிறது. அன்ன ஆகாரம் இன்றி ஆறு நாட்கள் பயணம் செய்து ஏழாம் நாள் 'செருக்கலை' என்னும் சிற்றூரை அனைவரும் அடைந்தனர்.

(தொடரும்)



திருமலைக் கோயில்-போட்டோ: சி. எஸ். ஆடியபாதம்-சிதம்பரம்.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

"அன்னை பார்வதிக்கும் ஈடாகாத அழகு! பிரகஸ்பதியின் பேரத்தி பெண்ணாய் பிறந்தவள், தவம் செய்கிறாள்! எதற்காக? யாரை நோக்கி?"

யோசனையோடு ராவணன்கேட்க, "நல்லது ராவணா, நான் வருகிறேன்" என்று கிளம்பினார் நாரதர்.

"நில்லும் நாரதரே! வேதவதி எதற்காக யாரை நோக்கித் தவம் செய்கிறாள்? அதைச் சொல்லி விட்டுப் போகலாமே."

"சரி, சொல்லி விடுகிறேன், இல்லாவிட்டால் நீ விடமாட்டாய். ஸ்ரீமந் நாராயணனையே பதியாக அடையவேண்டும் என்பது அவள் விருப்பம். அதற்காக ஹரியை நோக்கித் தவம் செய்கிறாள்"

ராவணன் பூமியே அதிரும்படியாய்ச் சிரித்தான். 'ஆகா...ஆகா... என் விருப்பம் பூர்த்தியாகும் நாள் நெருங்கி விட்டது. இனி வேதவதி என்னுடையவள்தான். முடிந்தால் அந்த ஹரி வந்து அதை தடுத்துக் கொள்ளட்டும்" என்று எக்காளமிட்டான்.

"உன் புத்தி தெரிந்திருந்தும் உன்னிடம் இதைச் சொன்னேன் பார்! ராவணா! பரஸ்திரிகளின் விஷயத்தில் மனதை அலைய விடாமல் கட்டுப்படுத்து. வேதவதியை உன்னால் நெருங்க முடியாது. மீறினால் கஷ்டமும் கவலையும் உனக்குத்தான். அதனால் நன்றாக யோசித்துச் செய்"

"நாரதரே! இதில யோசிககு எதுவுமே இல்லை. இனி வேதவதி என்னுடையவள்தான். நான் திரிலோகாதிபன், தசமுகன். நினைத்தால் அதை செய்தேதீருவேன். சாரணா...சீக்கிரம் மாரீச மாமாவை வரச்சொல்!" என்றான் ராவணன்.

"இனி உன்னைத் தடுக்க என்னால் முடியாது ராவணா. நான் வருகிறேன் மகாதேவ ... மகாதேவ —" என்ற சொல்லிக் கொண்டே போனார் நாரதர்.

"ராவணா! என்னை ஏதோ அவசர காரியமாய் அழைத்தாயாமே. என்ன விஷயம்?"

"ஆமாம் மாமா! தேவகுருவின் பேரப்பெண் வேதவதி தவம் செய்ய விந்திய மலைக்கு வந்திருக்கிறாளாம். ஹரியையே கணவனாய் அடைய வேண்டும் என்பது அவள் நோக்கம். அதை நாம தடுததாகவேண்டும். வேதவதி என்னுடையவளாக வேண்டும். சீக்கிரம் போய் வேதவதியை இங்கு கொண்டு வந்து சேர்" என்று மாரீசனைப் பணித்தான் ராவணன்.

(தொடரும்)



# பிராட்டியின் பெருமை

**1. ஆச்சாரியரின் திருவாக்கில் 'பிராட்டி'**

*பிராட்டி என்ற சொல் யாரைக் குறிக்கின்றது என்பதை முதலில் காண்போம்.*

*பூமிக்கு அடியிலே, மிக ஆழத்திலே அமைந்துள்ள வைரங்களைத் தோண்டி வெளியே கொண்டு வந்து தருவதைக் காண வியக்கின்றோம்! கடலின் அடித் தளத்தில் உள்ள முத்துக்களை, மூழ்கி மேலே கொண்டு வந்து தருவதையும் கண்டு மகிழ்கின்றோம்!*

*ரிஷிகள் இதிகாச புராணங்களை அருளினார்கள். ஆழ்வார்கள் அருளியது நாலாயிர திவ்யப்பிரபந்தம். இதற்கு வியாக்கியானங்களான விளக்க உரைகளை அருளியவர்கள் ஆச்சாரியர்கள்.*

*நம்பிள்ளையின் கடாட்சத்தினால் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு திருக்குமாரராய் அவதரித்தபிள்ளை உலகாசாரியர் இவைகளில் ஊறிக்கிடக்கும் ரகசியங்களை, உட்பொருள்களை, வைரத்தையும் முத்தையும் மிக முயன்று திரட்டுவதுபோல, 18 நூல்களாகத் திரட்டி வெளியிட்டருளினார். ஸ்ரீ வைணவ ஆசாரியரான பிள்ளை உலகாசாரியர் இயற்றியருளிய இந்நூல்கள் அஷ்டாதச ரகசியங்கள் எனவும் அழைக்கப்படும்.*

*[illegible] அட்சர லட்சம் பெறும் ஸ்ரீ வசனபூஷணமும், முமுட்சுப் படியும் அடங்கும்.*

*இந்தப் பதினெட்டு நூல்களில் இரண்டான 1. முமுட்சுப்படியில் துவய அதிகாரத்திலும், 2. ஸ்ரீவசன பூடணத்தில் புருஷகார உபாய அதிகாரத்திலும், 'பிராட்டி' என்றும், 'பெரிய பிராட்டி' என்றும் பெயர்ச் சொல்லாகவும், 'இவள்' என்ற சுட்டுச்சொல்லாகவும் அருளப் பட்டுள்ளது.*

**2. பெரிய பிராட்டியும் பூமிப்பிராட்டியும்**

*இவ்விதமாகப் பெரிய பிராட்டியார் என்றும், பிராட்டி என்றும் பேசுவது யாரை? ஏன்?*

*பரமபதத்திலே 1. திருமடந்தை, 2. மண்மடந்தை இருபாலும் திகழ்வதாலே (பெரிய திருமொழி 3-10-1) பூமிப்பிராட்டியாரான மண்மடந்தையினும் வேறுபடுத்தித் திருமடந்தையை—அதாவது சீதேவியைப் பெரியபிராட்டியார்என அருளுகிறார் பிள்ளை உலகாசாரியர்.*

*ஸ்ரீமந் நாராயணனான இறைவனுக்குப் பரமபதம் நித்திய விபூதி (நிலையான இருப்பிடம்). அவதாரங்கள் கண்டருளும் இம்மண்ணுலகம் லீலாவிபூதி (திருவிளையாட்டுக்கிடம்).*

---


திரு. நா. வேணுகோபால் நாயக்கர்,
பி.ஏ., பி.எல்.,
சென்னை—40.


---

**அவதாரங்கள்தோறும் உடன் அவதரிக்கும் பிராட்டி :**

*தெய்வீகத்தன்மை சுடர்விடும் பரமபதத்தில் எழுந்தருளியுள்ள போது உபய-தாயாரையும் இந்த இரண்டையும் 1. பெரிய பிராட்டியார் என்றும் 2. பூமிப்பிராட்டியார் என்றும் குறிப்பிடுவதுபோல, இவர்கள் மண்ணுலகாம் லீலா விபூதியில் தெய்வீகத் தன்மையை மறைத்துக் கொண்டு அவதரித்தருள்கையில் பிராட்டி என்பது மரபு.*

மல் பிராட்டி என்றாலும் சாலும்.

இதனால், சீதாபிராட்டி, உருக்கு மிணிப் பிராட்டி, நப்பின்னைப் பிராட்டி எனச் சொல் வழக்குகள் ஏற்பட்டுள்ளன.

3. பிராட்டிதான் சீதை என்பதை உறுதிப்படுத்தும்

பிள்ளை உலகசாரியரின் ஸ்ரீவசன பூடணத் திருவாக்கு :

ஸ்ரீவசன பூடண நூலிலே, "பிராட்டி", என்ற சொல்லாலேயே, சீதா பிராட்டியைக் குறித்தருள்கிறார் பிள்ளை உலகாச்சாரியர். உதாரணங்கள் :

உபாயத்திற்குப் பிராட்டியையும் திரௌபதியையும், திருக்கண்ண மங்கையாண்டானையும் போல இருகக வேணும். ஸ்ரீவசனபூஷணம்—(81)

பிராட்டிக்கும் திரௌபதிக்கும் வாசி, சக்தியும், அசக்தியும்—(82)

பிராட்டி ராட்சட்சிகள் குற்றம் பெருமாளுக்கும, திருவடிக்கும்அறிவி யாதவாறு போலே, தனக்குப் பிறர் செய்த குற்றங்களைப் பகவத்பாகவதர் விஷயங்களில் அறிவிக்கக் கடவன் அல்லன்.—(366)

ஸ்ரீவசனபூஷண வாக்கியங்கள்—முமுட்சுப் படி வாககியங்கள் .

பிள்ளை உலகாசாரியர் தமது முமுட்சுப்படி நூலிலும் இதனையே மேலும் உறுதிப்படுத்துகின்றார்.

திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப் பிக்கச் சொல்ல வேண்டாதவிறே. முமுட்சுப்படி—(129)

இவள் சன்னிதியாலே காகம தலை பெற்றது; இது இல்லாமையாலே இராவணன் முடிந்தான்.—(135)

எனவே ஸ்ரீ பிராட்டியின் பெருமை என்றால், சீதாபிராட்டியின் பெருமை என்றும் கொள்ளக் கிடக்கின்றது.

இதனையே பிராட்டி வைபவம் என் பது ஸ்ரீ வைஷ்ணவ மரபு.

றும், இப்பூவுலகில் அவதரித்துக் காட்டிய அதிசயங்கள் என்றும் கொள்ளலாம்.

4. கம்பர் காட்டும் சீதா பிராட்டியார் :

'நாராயணன் விளையாட்டெல்லாம்' தென் மொழியில் இராமாயணமாகப் பாடி அருளிய கம்பர்; இராமனை ஸ்ரீமந் நாராயணனாகவும் பாடினார்.

சீதையை இலட்சுமிதேவியாகவும் அதாவது திருமகளாகவும் காட்டு கின்றார். மிதிலையில் சீதை திருமணக் கூடத்தில் காலடி வைப்பது முதலே இவ்விதமாக அடி, முதல் பாடுகிறார்.

மணவாளனை அழைக்கும் மிதிலை :

நாம் இப்போது மிதிலா நகரில் இருக்கின்றோம்! காவல் அமைந்த மிதிலை அது! எனவே அது "கடி நகர்!"

ஆம், கொடிப் பறக்கும் மிதிலா புரிதான் இது! "செழுமணிக் கொடி கள்!"

ஞானவேந்தனை, ராஜ ரிஷியாம் ஜனக மகாராஜர் ஆளும் மிதிலையின் கொடிகளுக்குமல்லவா ஞானம் நிறைந்துள்ளது.

அவை யாரையோ கூவித் தம் கை களைக் காட்டி அழைக்கின்றனவே, என்ன ஆச்சரியம்!

"கைகளை நீட்டி அழைப்பது போன்றதம்மா!"

யாரை? எப்படி அழைக்கின்றன? இராமனும் ஐயனை "சீக்கிரம் வருக!" என்று.

"ஒல்லை வா! என்று அழைப்பது போன்றதமமா?"

ஏன் இப்படி இராமனை அழைக் கின்றன? அந்தக் கொடிகள்!

மிதிலா புரியிலே தேர்தல் நடை பெறவில்லை! ஆனால் திருமணத் தேர்தல் நடைபெறுகின்றதாம்! இது வரை எத்தனையோ வேட்பாளர்கள் வந்தனர். ஆனால் இந்தக் கொடிகள் அவர்கள் எவரையும் சட்டை செய்ய

கண்டதே தாமதம்! அழைக்க ஆரம் பித்தனவாம். காரணம்?

அழுக்கற்ற செந்தாமரை மலரினை விட்டு, "மையறு மலரின் நீங்கி!",

திருமகள் அல்லவா இங்கே அவ தரித்துத் திருமணத்திற்கும் தயாராக இருக்கின்றாள்.

"செய்யவள் இருந்தாள்!" என்று.

மிதிலையில் அவதரித்துள்ளவள் திரு மகளாக இருப்பின், அவளை மணக்க வரும் இராமன், பரமபதநாதனை தாமரைக் கண்ணனாக அல்லவா இருக்க வேணும்.

ஆம்! அவன் தாமரைக் கண்ணன் தான்! புண்டரீகாட்சனே!

"கமலச்செங்கண் ஐயனை அழைப் பது போன்றதம்மா!"

பொய்யில் புலவராம் திருவள்ளு வரும் தமது பொய்யாமொழியாம் திருக்குறளில்,

1. தாமரைக் கண்ணன் திருமால் தான் என்றும்,

2. அவன் எழுந்தருளும் இடம் உண்டு என்றும்,

3. அதுவே "தாமரைக்கண்ணனை உலகு!" என்றும் பரமபதம் என்றும சான்று தருகின்றார்.

"தாம் வீழ்வார் மென் தோள்
துயிலின் இனிது கொல்!
தாமரைக் கண்ணன் உலகு?"

இராமனை இப்படியாக அழைப்ப தில் இந்த மிதிலைக்குத்தான் என்ன எக்களிப்பு.

நிலமகள் எங்கேயோ போய்ப் பிறந்துவிடாமல், என்னிடமல்லவா பிறந்தருளியுள்ளாள். மிதிலாபுரி யாம் செய்த தவப்பயன் அல்லவா இது?

"யான் செய் தவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்"

சாதாரண தவமா இது! செய்ய வளான அவள் என்னிடம் பிறக்கும்

அவள் என் மடியினிலேயே திருமண மும் செய்து கொள்ளவும் அல்லவா "மா" தவம் செய்துள்ளேன்.

"யான் செய் மா தவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்!"

பூரண சந்திரோதயமாக மிளிரும் இப்பாடலை முழுவதுமாகக் காண் போம்.

"மை யறு மலரின் நீங்கி,
யான் செய் மாதவத்தினிவந்து,
செய்யவள் இருந்தாள்!" என்று,
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர்
கமலச் செங்கண்
ஐயனை, "ஒல்லை வா!" என்(று)
அழைப்பது போன்றதம்மா!

இலட்சுமியான சீதை வீற்று இருந்த மிதிலை:

செந்தாமரை மலரினைவிட்டுத் திரு மகள் மிதிலையில் அவதரித்ததும், மிதி லையே களிப்பிலும் சீர்மையிலும் உச்ச நிலை அடைந்து, செந்தாமரையுமாகி விட்டதாம்.

இவ்விதமாக அகம் கனிந்து, முகம் மலர்ந்து வரவேற்ற மிதிலையிலே புகுந்தனர், விஸ்வாமித்திர முனி வரின் தலைமையில், பெரிய பெருமா ளும் இளையபெருமாளும்!

மதனற்கும் எழுத ஒண்ணாச சீதையின் அழகு!

செந்தாமரைகத் தோற்றதா சீதையின் அழகு! காமனின் கற்ப னைக்கும் அடங்குவதா அது!

"ஆத்ரித்து! அமுதில் கோல் தோய்த (து)
அவயவம் அமைக்கும் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லால்
மதனற்கும் எழுத வொண்ணாச்
சீதையை தருதலாலே
நிலமகள் இருந்த செய்யப்
பாதெனப் பொலிந்து தோன்றும்
பொன் மதில் மிதிலை புக்கார்!"

யில் கூடினரே! குறையுள்ள சீதையும் இராமனும்!

சீதாபிராட்டிதான் திருமகளாம் பெரிய பிராட்டி என்று வெளிப்படுத் தும் கம்பநாட்டாழ்வார், இதனையே தொடர்ந்தும் விளக்குகிறார்.

சீதைக்கும் ஒரு குறை உண்டு. ஆம்! அவளுக்கு இடை (மருங்கு) இல்லை. "மருங்கிலா நங்கைக்கும்."

இராமனுக்கும் ஒரு குறை இருக்கத் தான் செய்கிறது. அவனுக்கு வசை (கெட்ட பெயர்) கிடையாதாம். "வசையில் ஐயற்கும்!"

இவர்கள் இருவருக்கும் இடையில் இதுவரை இருந்த பிரிவு, போன இடம் தெரியாமல் ஓடிவிட்டது.

மிதிலாபுரியின் ராஜ வீதியிலே, வெற்றி நடை போட்டுக் கொண் டிருந்த இராமனும், மேலே பலகணி வழியாக வேடிக்கைப் பார்த்துக் கொண்டருந்த சீதையும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பார்த்துக் கொண்டது மட்டு மல்ல, ஒருவரை ஒருவர் அடை யாளமும் கண்டு கொண்டார்கள். "திருப்பாற்கடலிலே திருவனந்தாழ் வான் மீது குலாவிக் கொண்டிருந் தவர்களல்லவா நாம்" என்று.

கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்:

இப்படி அடையாளம் கண்டு கொண்டதால் என்ன ஆயிற்று. இரா மன் உடல் தனியாகத் தவித்தபடி வீதியில இருநதது! "(ஒருஙகுறும)" சீதையின் உடல் தனியாகத தவித்த படி பலகணியில் இருந்தது. ஆனல் இவர்கள் இருவரின உயிரோ ஒனறை ஒன்று ஒட்டிக் கொண்டன!

"ஒருங்குறும், இரண்டு உடல்உயிர் ஒன்று ஆயதே!"

இவ்விதமாகப் பிரிவு நீங்கி ஒரு வரை ஒருவர் கண்டு கொணட பிறகு பிரிந்தவர் கூடினல் பேசல் வேண டுமோ?

வதும் அவசியம்தானு?

வாசுகிக்கு வாழ்வளித்த—வாசுகி யால் வாழ்வு பெற்ற—வள்ளுவரும் பேசுகிறர்.

"கண்ணுெடு கண் இணை நோக்கு
ஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல".

சீதாபிராட்டியே பெரிய பிராட்டி யார் என்பதைக் காணலாம் கீழ்க் காணும் இப்பாடலிலும்:

"மருங்கிலா நங்கைக்கும்,
வசையில் ஐயற்கும்,
ஒருங்குறும் இரண்(டு) உடல்
உயிர் ஒன்(று) ஆயதே!"
கருங்கடல் பள்ளியில்
கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினல்
பேசல் வேண்டு மோ!"

காதல் என்னும் தெய்வீக உணர்வு, பிறவிதோறும் தொடரும் என்பது நமது வேத நம்பிக்கை, சதானந்தரின் சாட்சியம்.

இராமாயணக் காலத்தில் எழுந் தருளியிருந்த முனிச்சிரேட்டர்களான இருவர் இதற்குச் சான்று பகர் கின்றனர்.

ஜனகமகாராஜரின் சபையிலே குல குருவாக விளங்கிய கௌதம ரிஷியின் புதல்வரான சதானந்தர் பேசுகிறர். பெண் வீட்டுக்காரர் அல்லவா? பெணணைப்பற்றி அளக்கின்றர்.

சீதை பெரிய பிராட்டியாரின் அம்சம் மட்டுமல்ல. பூமிப் பிராட்டி யின் அம்சமும் கூடத்தான். பூமி தேவியின் மடியிலே ஏர்க்கலப்பையால் கீற வேணடியதுதான்! தன் அருளைக் கொட்ட ஆரம்பித்துவிடுகிறள், அவள மேனியிலிருந்து நெற்கதிர்க ளாகிய பசசைப் பசுங்கிரணங்கள் வெளிவநது பிரகாசிக்கும்.

ஆனல் இவை மட்டிலும் அல்ல அவள் செல்வம். அவள் வயிற்றிலே பொன் முதலான எவ்வளவோ மூலப் பொருள்கள், கனிப் பொருள்கள், சுனைகள், திரவ ஊற்றுக்களும் பொதிந்துள்ளன. அந்தப் பல்வகைப் பட்ட மூலப்பொருள்களான செல்வங்

ஒரே சமயத்தில் வெளிப்பட்டால், அக்காட்சியினைப் பார்க்க வேண்டுமே கண்கொண்டு!

அந்தப் பேரழகே எங்கள் சீதை.

"உழுகின்ற கொழு முகத்தின்
உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவி மடந்தை
உரு(வு) வெளிப்பட்டு" எனப்

பாற்கடலைக் கடைந்தபோது அமுதத்துடன் எழுந்தருளிய பெரிய பிராட்டியான திருமகள் இப்படியான பேரழகுடன் அவதரிதத சீதாபிராட்டியைக் கண்டாள்.

"புணரி எழுகின்ற தெள் அமுதோடு
எழுந்தவளும்"

உடனே, பனிச்சென்று அவள் மன சாட்சி சொன்னது: 'இனி நீ கொலு விற்றிருககும் இடத்திலே, சீதைதான் எழுந்தருளியிருக்க வேண்டும். நீ கீழே இறங்கி, ஒரு பக்கமாக நின்று. அவளைத் தொழுது கொண்டிருப் பாயாக'.

பூதேவியின் வளத்தையும், ஸ்ரீதேவி யின் வளத்தையும் ஒருங்கே திரட்டிக் கொண்டு உருவெடுத்த சீதா பிராட்டிக்குத் திருமகள் தன் இருக்கையைக் காலி செய்து, கீழே இறங்கிக் கை கட்டிக் கப்பம் செலுத்த வேண்டியது தானே.

"இழிந்து ஒதுங்கித் தொழுகின்ற"

இவ்விதமாக எல்லா நல்ல நலன் களை உடைய பெண் குலத்திற்கே எங்கள் சீதை அரசியாக அவதரித் துள்ளாள்.

நல் நலத்துப்பெண்ணரசி தோன்றினாள்:

சதானந்தர் பெண் வீட்டார் சார் பிலே அடித்துக் கொள்ளும் பெருமை இது. தகும்! தகும்.

இதோ! அந்த அழகுச் சொட்டும் கவிதையின் முழு உருவம்.

"உழுகின்ற கொழு முகத்தின்
உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவி மடந்தை
உருவெளிப் பட்டெனப், புணரி
எழுகின்ற தெள்ளமு தோடு
எழுந்தவளும் இழிந்து, ஒதுங்கித்
பெண்ணரசி தோன்றினாள்!"

வசிட்டரின் வாக்கு:

அடுத்தபடி வசிட்டரின் வாக்கு! இவர் பிள்ளை வீட்டார். ஆகையி னாலே மாப்பிள்ளையை வைத்தே மண மகளை அறிகிறார்.

மிதிலா நகரம் செய்த தவத்தினால் சீதை அவதரித்தாளா?

அப்படித்தான் தசரதச் சக்ரவர்த்தி யின் சாம்ராச்சியத்தில் உள்ள நாங்கள்அனைவரும்செய்ததவத்தினால் அல்லவா இராமனும் அவதரித்தான்.

"எங்கள் செய் தவத்தினில்
இராமன் என வந்தோன்"

இந்த 'எங்கள் இராமன்' என்ன சாமானியனா?

வடிவார் சோதி வலத்துறையும் சுட
ராழியும
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும்
ஏந்திய ஆதி மூலபுருஷன்தான்.

உலகை எல்லாம் தன் திருவடியால் அளந்து, ஆட்படுத்தி, ஆளும் நெடு மாலே.

சங்கினொடு சக்கரமும்
உடைத்த தனிமுதல் பேர்
அங்கண் அரசு!

இவ்விதமாக, மணமகன் திருமால் ஆகையினாலே நிச்சயமாக மணமகள் திருமகளாகத்தானே இருத்தல் வேண்டும்.

அவன் சங்கு சக்கரத்தை விட்டு இங்கு அவதரித்தான். இவள் தாமரை மலரினைவிட்டு அவதரித் துள்ளாள். அவ்வளவுதான்.

ஆதலின் "அவ் அல்லி மலர் புல் லும் மங்கை இவளாம்" என வசிட் டன் மகிழ்வுற்றான். சதானந்த முனி வரின் திருவுள்ளத்தை அப்படியே ஆதரித்த வசிட்ட முனிவரின் தீர்ப்பு.

"எங்கள் செய் தவத்தினில்
இராமன் என வந்தோன்;
சங்கினொடு சக்கரம்
உடைத்த தனி முதல்பேர்
அங்கண் அரசு! ஆதலின்; அவ்
அல்லி மலர் புல்லும்
வசிட்டன மகிழ் வுற்றான்"

5. சீதாபிராட்டியின் திருமண வைபவம்:

பெரிய பிராட்டியார்தான் சீதா பிராட்டி என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு, பிராட்டியின் பெரு மையை அல்லது வைபவத்தைக் காண லாம்.

அயோத்தி(யின்) இராமன், கௌ சல்யா ராமனாக, தசரத ராமனாக வளர்ந்த பிறகு, சீதாராமனாவதற்குக் கலியாண ராமனாக மிதிலையின் ராஜ வீதியிலே பவனி வருகிறான். அலை அலையாகத் திரண்டு வந்த மக்கள் வெள்ளம் இராமனைக் கண்டு வியந் தனராம். ஆனால், ஒருவராவது இரா மனின் முழுவடிவத்தைக்காண முடிய வில்லையாம்.

"யாரே வடிவினை முடியக் கண் டார்!" இதற்குக் காரணம் என்ன?

இராமனின் தோள் அழகைக் கண் டவர்கள், தோளையே கண்டார் களாம்.

"தோள் கண்டார் தோளே கண்டார்"

அடுத்தபடி இராமனின் வீரக் கழல் அணிந்த தாமரை போன்ற திருவடி களில் கண் வைத்தவர்கள், வைத்த கண்ணை வாங்காமல் அவன் திருவடி களையே சேவித்தார்கள்.

"தொடு கழற்கமலம் அன்ன தாள்
கண்டார்
தாளே கண்டார்!"

மூன்றாவதான பிரிவினர்கள், இராமனுடைய விசாலமான திருக்கை களைச் சேவிக்க ஆரம்பித்தவர்கள், அத்திருக்கைகளின் அழகிலேயே சொக்கிவிட்டார்களாம்.

"தடக்கை கண்டாரும் அஃதே!"

இங்கே ஒரு நியாயமான கேள்வி. ஆயிரக்கணக்கான மக்கள் கூடி, தெய்வமானாலும்கூட,மனித வடிவத் தில் உலவும்போது தோள், கால், கை இவைகளைக் கண்டு, வைத்த கண் வாங்காமல் பார்த்தார்கள் என்றால் நம்ப முடியுமா? இதைக் கவிச் சககரவர்த்தியின கவிதையாகவும் கருதலாமா?

கவிச்சக்கரவர்த்தியாம் கம்பநாட் டாழ்வார் இப்பாடலில் பல பூட்டுக் களை அமைததுத் தன் முழுத்திறமை யையும் காட்டியுள்ளார். பிராட்டி யின் பெருமை எனபது இங்கு மகுட மாகையாலே ஒரு பூட்டை மாத்திரம் நுண்ணிதின் ஆராய்ந்து அறியலாம்.

(அடுத்த இதழில் முடியும்)

# ஆண்டாள் முகில்விடு தூது

தமிழ்ப் பிரபந்த வகைகளில ஒன்று தூது. ஒருவர் கருத்தை மற்ற வர்க்கு உணர்த்தும் ஆற்றலுடைய மக்களேயே தூது விடுவது உலக வழக்கில் சிறந்ததாக இருந்தாலும், செய்யுள் வழக்கில் அஃறிணைப் பொருள்களையும் தூது விடுவது ஒரு மரபாக இருந்து வருகிறது. வெவ்வேறு இடங்களில் தனித்தனியாக இருக்கும் தலைவனும் தலைவியும் ஒருவருக்கு ஒருவா தூது அனுப்பும் செய்தியை இலககியங்களில் காண முடிகிறது. போர் புரியத் தொடங்கும்முன் அரசர் பகையரசருக்குத் தூது அனுப்பியதை இராமாயணம் மகாபாரதம் ஆகிய வற்றில் காணலாம். திருமால் இராமபிரானுக அவதரித்து பூமியில் வாழ்நத நாளில, இராவணனுல் இலங்கையில சிறை வைககப்பட்டிருந்த சீதைக்கு இராமன அனுமனைத தூது அனுப்பினன். அனுமன் தூது, அஙக தன் தூது முதலானவை நடைபெற்றிருககின்றன. கணணனுகப் பிறநத திருமால் பாரதப் போர் ஏற்படுவதற்கு முன் பாண்டவர் தூதனகைத் துரியோதனனிடம் செனறிருக்கிருர்.

சங்க நூல்களில் நற்றிணை ஐங்குறுநூறு அகநானூறு ஆகியவற்றில் அஃறிணைப பொருளகளைத் தூது விட்டதாக அமைநத செய்யுட்கள இருக்கின்றன. ஆழவார்களின் அருளிச் செயல், தேவாரம், கலம்பகம் முதலியவற்றிலும் இத்தகைய பாடல்கள அமைநதுள்ளன.

‘ இயமபுகினற காலதது எகின மயிற்கிள்ளை
பயம் பெறுமேகம் பூவை பாங்கி-நயந்த குயில
பேதை நெஞ்சம் தென்றல் பிரமர மீரைந்துமே
தூதுரைத்து வாங்கும் தொடை’

என்று தூது விடுதற்குரிய பொருள்களை இரத்தினச் சுருக்கம் என்ற நூல் கூறுகிறது. திருவளளுவர் திருக்குறள் பொருட்பாலில் ‘தூது’ என்ற அதிகாரத்தில் தூதின் இலக்கணத்தையும, தூதருக்கு இருக்க வேண்டிய பண்புகளையும் விவரித்துக கூறுகிருர். வைணவ சமயத்தில் ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை ‘அவயவி’ என்று கூறுவர். நம்மாழ்வாருக்குச் சடகோபன், மாறன், பராங்குசன் என்று பல பெயர்களுண்டு. ‘வேதம் தமிழ் செய்த மாறன்’ என்று இவரை அனைவரும் புகழ்வர். இவர் அருளிச் செய்த திருவாய் மொழியில் தாமான தன்மையில் கூறிய பாசுரங்கள், பக்தியின் மேலீட்டால் பெண் தன்மையை ஏறிட்டுக் கொணடு கூறும் பாசுரங்களும் அடங்கி இருக்கின்றன. பெண் தனமையோடு கூறும் பாசுரங்கள் தாயப் பாசுரங்களாகவும் தோழிப் பாசுரங்களாகவும் தலைவிப் பாசுரங்களாகவும் அமைந்திருக்கும். இவ்வாழ்வார் தாமான தன்மை மறந்து (நாயகியாக) தலைவியின் தன்மையை ஏற்கிருர். பராங்குச நாயகியாக மாறுகிருர். பகவான் இவளோடு (பராங்குச நாயகியோடு) சேர்ந்து மகிழ்ந்து இருநது பிரிந்து செல்கிறுன். மீண்டும் அவன வருவான் எனறு பராஙகுசநாயகி எதிர்பார்ககிருள. அவன் வரவில்லை. பிரிவாற்ருமையால்தலைவிககுஏற்படும மெய்ப்பாடுகள் எலலாம் இவளுக்கு ஏற்படுகினறன. மையல் முற்றுகிறது. தன் நாயகனுகிற நாராயணனையே நினைக்கிருள். உடல் மெலிகிறது. உலகில் காணப்படும் பொருள்களெல்லாம், பிரிவாற்ருமையை வளர்த்துத் தன்னை வருத்துவதாகவே நினைக்கிருள் பராஙகுச நாயகி. பகவானும் வரவில்லை. கால தாமதம் செய்கிருன். தன் நிலையை பகவானிடம் எடுத்துக் கூற எதையேனும் தூது அனுப்பினுல் என்ன என்று நினைத்தாள். அவனை எப்படியாவது அடைய வேண்டும் என்று எண்ணினுள். ‘அஞ்சிறையமட நாராய்’ என்ற திருவாய் மொழியில் நாரை, குயில், அன்னப்பறவை, அன்றிற்பறவை, குருகு, வரி வண்டு, கிளி, பூவை ஆகியவற்றை ஒவ்வொரு பாசுரத்திலுல் பகவானிடம தூது அனுப்ப நினைதது ‘ஆழிமட நெஞ்சே!’ என்று அழைத்து முடிவில் நெஞ்சைத் தூது விட்டாள் எனறு கூறப்படுகிறது. இத்திருவாய்மொழி தவிர, ‘வைகல் பூங்கழிவாய்’ ‘பொன்னுலகாளீரோ’ ‘எஙகானலகஙகழிவாய்’ ஆகிய பதிகங்களும் திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்களாக அமைந்தன. ஆழ்வார் இத்தகைய பாசுரங்களை அருளிச் செய்யப் பெண் தன்மையைத் தற்காலிகமாக ஏறிட்டுக் கொள்ள வேண்டி இருந்தது. இவ்வாறு பெண தன்மையை மேற்கொண்டு கூறினுலும் பதிகத்தின்


ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம்
ஸ்தல சயனத்துறைவார் ஸ்வாமி,
சென்னை-5.


கடைசிப் பாசுரத்தில் பெண் தன்மை நீங்கிப் பழையபடி ஆழ்வாராகவே மாறி விடுவாா. இயறகையிலே பெண்ணுகிய ஆண்டாள் பகவான்மீது மையலுற்றுப் பாசுரஙகள் பாடும்போது பால் மாற வேணடிய அவசியமே இல்லை.

எம்பெருமானுக்கு எப்போதும் நன்மைகள் ஏற்பட வேண்டும் என்று பொங்கும் பரிவோடு எல்லாக் காலங்களிலும் மங்களாசாசனம் செய்வதிலேயே (பல்லாண்டு பாடுவதிலேயே(

பெருமை பெற்றவர் பெரியாழ்வார். இவர் ஸ்ரீ வில்லிபுத்தூரில் நந்தவனம் அமைத்து பகவானுக்கு உகந்த மலர்ச் செடிகளை வளர்த்தார். நல்ல மலர்களைக் கொய்து மாலை கட்டி பக வானுக்கு அளித்து வந்தார். இவரது கைங்கரியத்தினால் மகிழ்ந்த எம்பெரு மான் இவருக்கு நல்லதொரு செல் வத்தை அளிக்க விரும்பினான். ஒரு திருவாடிப்பூர நன்னாளில் நந்தவனத் திலுள்ள திருத்துழாய்ச்செடியின் அரு கில் திருமகள் போன்ற பெண் குழந்தை ஒன்றை ஆழ்வார் கிடைக் கப் பெற்றார். தனக்கு இத்தகைய அருஞ்செல்வத்தைக் கொடுத்த பக வானின் பேரருளை நினைத்து உள்ளம் உருகிக் குழைந்தார். அவனது செயலை வியந்து போற்றினார். அக் குழந்தையை எடுத்து வந்து 'கோதை' என்று பெயரிட்டுச் சீரும் சிறப்புமாக வளர்த்தார். பக்தியுடன் கிருஷ்ண சரித்திரங்களை (கண்ணன் திருவிளை யாடல்களை)க் கலந்து உணவூட்டு வார். குழந்தையின் சொற்களைக் கேட்டு பூரிப்பு அடைவார்; அதனோடு இனிதே உரையாடி மகிழ்வார். உல கில் குழந்தையின் மழலைச் சொற்களை விட இன்பம் அளிப்பது வேறொன்று இல்லை. குழநதையின் செயல்களையும விளையாட்டுக்களையும் கணடு மகிழும் பெற்றோர்கள் பெரும் பாக்கியம் பெற்றவராவர். தன் மகனான கண் ணன் செயலைக் கணடு எந்நாளும் மகிழ்ந்த யசோதையை ஆழ்வார்கள 'அழுகையும் அஞ்சி நோக்கும் அந் நோக்கும் அணிகொள் செஞ்சிறு வாய் நெளிப்பதுவும் தொழுகையும் கணட அசோதை தொல்லை இன்பத்து இறுதி கணடாளே' எனறு பாராட்டி னார்கள். வள்ளுவரும் 'குழலினிது யாழினிது என்பர் தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்' என்று கூறினார். பெரியாழ்வாருக்குக் கிடைத்த பெண் குழந்தை சாதாரணக்குழந்தையன்று. ஸ்ரீ பூமிப்பிராட்டியே குன்றுத வாழ் வான வைகுந்த வான் போகந்தன்னை இகழ்ந்தது பூமியில் வந்து தோன்றி ஆழ்வார் திருமகளாக ஆனார். தன்னை யசோதையாகவும் கண்ணனைத் தன் மகனாகவும் கொண்டு, கண்ணன் திருவிளையாடல்களை எல்லாம் முற்றும் கண்டு அழகிய பாசுரங்களை அருளிச் செய்து நமக்குக் கொடுத்த பெரியாழ் வார், தன் மகளாகிய கோதைக்குப் பாகவதக் கதைகளை அடிக்கடிச் சொல் வார். கோதை அதைக் கேட்டுச் செவியுணவின் சுவை கொண்டு மகிழ்ந்து கிருஷ்ண பக்தியில் ஆழ்ந்து விடுவாள்.

ஆண்டாள் கண்ணனைக் காண ஆசைப்பட்டாள். அவனோடு உரை யாட விரும்பினாள். அவனையே கண வனாகப் பெறவும் உறுதி கொண்டாள். பக்தி முதிர்ந்ததும் எலலாம் கண்ணனா கவே தோற்றமளித்தன. 'பொங்கோ தம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச செல் வனா'ராகிய திருவரங்கனைக் கணணனா கவே நினைத்தாள்; அவனுக்கே பூ மாலையைச் சூடிக்கொடுத்தாள்; பாமாலையாகிய திருப்பாவையைப் பாடிக் கொடுத்தாள். திருப்பதிக்குச் செல்லுகிறவர்கள ஸ்ரீநிவாஸனின் பெயரை 'கோவிந்தா! கோவிந்தா!' என்றே சொல்லுகிறார்கள். கோவிந் தன என்ற சொல் மாடு கன்றுகளை மேய்த்து மகிழ்ந்த கண்ணனையே குறிக்கும். ஆண்டாள் திருவேங்கட முடையானைக் கணணனாக எண்ணி னாள். அவனையே மணாளனாகப் பெற விரும்பினாள். மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் என் கிறாள். வட்டமாகக் கோடு கீறி அதற் குள் பல சுழிகளைச் சுழித்து அவற் றைக் கூட்டிப் பார்க்கும்போது இரட் டைக் கணக்கில் முடிந்தால் நினைத்த எண்ணம் நிறைவேறும், ஒற்றையாக முடிநதால் நினைத்தது நடைபெறாது. இது குறிபார்த்தல் எனும். ஒரு சகு னமாகும். இதற்குக் கூடலிழைத்தல் என்றுபெயர். இவ்வாறு குறி பார்க் கிறாள் ஆண்டாள். 'காட்டில் வேங் கடம் கண்ணபுர நகர், வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன், ஓட்டரா வந்து என் கை பற்றித் தன்னொடும் கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே' என் கிறாள். திருவேங்கடவன் ஓடி வந்து தன்னை அணைத்துக் கொள்வானா? என்று எதிர்பார்க்கிறாள். தன திரு மணப் பந்தலுக்குள் 'கோவிந்தன்' என்கிற காளை புகுந்து வருவதாகக் கனவு கண்டாள்.

ஒரு சமயம் திருவேங்கடவன் ஆண் டாளோடு தனிமையில் இருந்து விட்டு மறைகிறான். மழைக் காலத்தில் வருவதாகச் சொல்லி விட்டுச் சென றான். ஆணடாள் தன்னுடைய சோலைக்குச் சென்று இயற்கை யழகைக் கண்டு மகிழ்வாள். செடி யும் கொடியும், மரமும், மலரும் அவ ளுக்குத் திருவேங்கடமுடையானாகவே தோற்றமளிக்கும். அவனுடைய வரவை ஒவ்வொருநாளும் எதிர் பார்த்துக கொண்டே இருப்பாள். மழைக் காலம் வந்தது. வானத்தில் நீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்கள் பரவி இருந்தன. அவை தன் நிறத்தால் பகவானின் நிறத் தைக் காட்டி ஆண்டாளின பிரிவாற ாமையை மேலும் வளர்த்தன. மேகங் களோடு பகவானும் வந்திருப்பான் என்று நினைத்தாள். 'மேகங்களே! எம்பெருமானும் வந்தானோ?' என்று கேட்டாள். மேகங்கள் பதில் சொல்ல வில்லை; பகவானும் புலப்படவிலலை, தன் ஆற்றாமை நிலையை விளக்கிச் சொல்லுமாறு ஆண்டாள் மேகங் களைத் திருவேங்கடவனிடம் தூது அனுப்புகிறாள்.

விணணில மேலாப்பு விரித்தாறபோல
மேகங்காள!
தெண்ணீா பாய்வேஙகடதது என
திருமாலும் போந்தானே?

திருவேங்கடவனை நினைத்து நினைத் துக் கண்ணீர்விட்டு அழுது கொண்டு இருக்கிறேனே! என்னிடம் சொல்லிப் போனபடி வராமல் இருந்து என்னை வருத்துவது அவனுக்குப் பெருமை யாகுமா?பெண்ணின் வருத்தமறியாத வன் என்று பழி ஏற்பட்டுவிடுமே! நீங்

கள் எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்! திருவேங்கடவன் விரைந்து வந்து என்னை அணைத்துக் கொள்ள வேண்டும; என்னைவிட்டுப் பிரியாது இருக்க வேண்டும் என்று நான சொல்லியனுப்பியதாக அவனிடம் சொல்லுங்கள்! அவன் என்னைவிட்டுப் பிரிநது சென்றதால் என் உடல் இளைத்துக் கைகளில் அணிந்திருந்த வளைகள் சரிநது விழுநதுவிட்டன. அவை மீணடும் என் கைகளில் தங்கும்படி எனனோடு இருநது என் இளைப்பை நீக்கும்படி நான் வேணடுவதாக அவனிடம் கூறுங்கள். நான வலிமையும் அழகும இழநது பிரிவாற்ருமையால் வருந்துகிறேனே! மழைக் காலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்றற்று விழுவது போல் ஒசிந்து வீழ்கிறேனே! 'வருந்த வேண்டா; சீக்கிரத்தில் வருகிறேன் ('மாஸு"ச:') என்று ஒரு வார்த்தை அவன் எனக்குச் சொல்லி அனுப்பக் கூடாதோ! உலகில் எல்லோருக்கும் ரக்ஷகனாக இருக்கும் பகவான் (அவதார காலத்தில்) தன்னைச் சேர்ந்த உறவினர்களையும் காப்பாற்றியவன் என்று பெயர் பெற்றவன். அப்படிப்பட்டவன் என்னைக காப்பாற்ருமல் இப்படி மறந்திருக்கிருனே! நான் உயிர் துறந்தால் ஒரு பெண பிள்ளையை வதைத்துக் கொலை செய்தான் என்று நான் கூறியதாக அவனிடம் அடி பணிந்து விண்ணப்பம் செய்யுங்கள்! நீங்கள் தான் என்னை நேரில் பார்க்கிறீர்களே! எனக்கு என்ன செய்தால் நன்மையுண்டாகும் என்பதை நீங்களாகவே அவனிடம் சொல்லி, அவன் வெகு விரைவில் என்னிடம் வருமாறு செய்யுங்கள்! ('வாசா தர்மம் அவாப்நுஹி') என்று கூறி திருவேங்கடத்திற்குச் செல்லுமாறு பகவதநுபவத்தில் குறையாதவரான பெரியாழ்வாரின் திருமகளார் ஆண்டாள் முகிலைத் தூதுவிடுத்தாள்.

நாகத்தினணையானை நன்னுதலாள்
நயந்துரைசெய்
மேகத்தை, வேங்கடக்கோன் விடு
தூதில் விண்ணப்பம்
போகத்தில் வழுவாத புதுவையர்
கோன் கோதை தமிழ்
ஆகத்து வைத்துரைப்பார் அவரடியா
ராகுவரே.

:

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

நித்ய சூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானுடைய 'துயரறு சுடரடி தொழுதெழென் மனனே!' என்று மனத்தைப் பார்த்துச் சொல்லுகிருர். துயரறு சுடரடி - அடியார்களுடைய துயரை அறுக்கும ஸவபாவமுள்ள சுடர்மிக்க திருவடிகள்.

'சுடரடி' என்பது எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை (திருமேனியை) குறிப்பதாகும்.

சுடரொளி மூர்த்தியை 'மாசூணச் சுடரும்பாய்' என்கிறபடி. தாயைக் கணட சேய் முலையிலே வாய் வைக்குமாறு போல, இவரும எம்பெருமானுடைய தேனே மலரும திருப்பாதம் எனபபடும் திருவடிகளிலே மனதை வைக்கிருர்.

'துயரறு' என்பதற்கு அடியவர்களின் துயரை அறுத்த பிறகே தான் துயர் தீர்ந்தாஞய் இருக்கும் சுபாவம் உள்ளவனன்றே எம்பெருமான். 'வ்யஸநேஷு" மனுஷ்யாணும் க்ருசம் பவதி து:கித' என்கிறபடி ஆழ்வாருடைய மயர்வை அறுத்து, அதனபின் தான் துயர் தீர்ந்தான் ஆயிற்று. இவ்விதமாகத் திருவடிகளில் ஸகலவிதமான கைங்கர்யங்களையும் செய்து, அநாதி காலமாய்ப் புறம்பான விஷயங்களில் ஈடுபட்டு அனுபவித்த துன்பம் எல்லாம் தொலைந்து கடைத்தேறுமாறு 'என் மனனே' என்று தன் திருவுள்ளததை குறித்துச் சொல்லுகிருர். இரண்டாம் அடியில் 'எனக்கு அருளினன்' என்னுமல் 'அருளினன்' என்றவர் இங்கு 'என் மனனே' என்கிருர். அதாவது தன மனத்தை முன்னிலையாக்கிப் பேசுகிருர். மனத்தின் உதவியின்றி யாருக்கும எவ்விதமான அறிவும் ஏற்பட முடியாது. ஆனல் இது ஆத்மஜ்ஞான ஸ்வரூபமன்று. உலகத்தாரைப்போல் 'அநநமயம ஹி ஸெமய மன:' என்கிறபடி லௌகிகமான சேற்றின் சக்தியினலே இயங்கும் மனமன்றே! இது உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம கண்ணன் எம்பெருமான் என்றும், 'அத்ய தேத்தி ச பூதாநி, தஸ்மாதந் நம் ததுச்யத இதி' என்றும் 'வாஸு" தேவஸ் ஸர்வம்' என்றும் சொல்லுகிறபடி எம்பெருமானையே ஸர்வ வித போக்யமாக கொணடுள்ள என்னுடைய மனம் என்கின்றபடி. பெருப் பேறு பெற்ற ஒருவன் அதைத் தனக்கு அளித்தானவர்களிடம் சொல்லிக் கொள்ளுகிற மாதிரி, ஆத்மஸ்வரூபத்தில் ஊறுகிற இன்பத்தை, அதற்கு மிகவும் நெருக்கத்தில் உள்ளதான மனதை விளித்துச் சொல்லுகிருர். உயர்வற என்று தொடங்கி முதல் மூன்று அடிகளையும் நான்காவது அடியுடன் தனித் தனியே சேர்த்து இச்செய்யுளை மூன்று பாகமாக அமைக்கலாம்:

1. உயர்வற உயர்நல முடையவன் யவன்,
அவன் துயரறு சுடரடி தொழுதெ
ழென் மனனே!

2. மயர்வறு மதிநல மருளினன யவன்,
அவன்
துயரறு சுடரடி தொழுதெழென்
மனனே!

3. அயர்வறும் அமரர்களதிபதி யவன்,
அவன்
துயரறு சுடரடி தொழுதெழென்
மனனே!

என்றபடி. இதில் 'துயரறு சுடரடி தொழுதெழென் மனனே' என்னும் நான்காவது அடி மேலும் இரண்டு

தரம் ஆவ்ருத்தி செய்து கொள்ளப் பட வேண்டும். 'ஸக்ருத்தே அகனே நம: த்விஸ்தே நம: த்ரிஸ்தே நம' என்கிறபடியும், 'நம: புரஸ்தா தத ப்ருஷ்டதஸ்தே' என்கிறபடியும், 'பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம' என்கிறபடியும, 'நமோ நமோ வாங்ம நஸாதி பூமயே நமோ நமோ வாங மனஸைக பூமயே, நமோ நமோ அநந்த மஹா விபூதயே நமோ நமோ அநந்த தயைக் சிந்தவே' என்கிறபடியும் காண்க.

எனவே இப்பாட்டை முழுவதையும கீழ்க்கண்டவாறு ஒரே வாக்யமாக நினைத்து அனுபவிக்கலாம்.

'உயர்வற உயர் நலமுடையவன் யவன், அவன்
மயர்வற மதிநல மருளினன், மயர்
வற மதிநலமருளினன்
யவன், அவன் அயர்வறும் அமரர்கள்
அதிபதி, அயர்வறும்
அமரர்களதிபதி யவன் அவன் துயரறு
சுடரடி தொழுதெழென் மனனே'

மேலும் இப்பாட்டில் 'அர்த்த பஞ்சகம்' தெளிவாக விளக்கப்படு கிறது. உயர்வற உயர்நல முடை யவன் - அயர்வறுமமரர்களதிபதி என் கிற பகுதி இறைவனுடைய ஸ்வரு பத்தை விளக்குகிறது. 'மயர்வற' எனும் பகுதி தடையாகித் தொக்கிய லும் ஊழ்வினையையும், அதுஅழிவதை யும் விளக்குகிறது. 'அருளினன்' என பது பேரின்பத்திற்கான உபாயத்தை சொல்கிறது. 'துயரறு சுடரடி தொழு தெழு' என்கையாலே, எம்பெரு மான் திருவடிகளில் பணி செய்து உய்வதே உண்மையான பேரின்பம் என்று பேற்றின் தன்மையை நிரூபிக கிறது. 'என மனனே' என்பதிலே அதிகாரி ஸ்வரூபம் சொல்லப்படு கிறது. இவ்வாறு அர்த்த பஞ்சகம இப்பாட்டில் நிருபிக்கப்படுகிறது.

ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரங்கள் யாவும, தன்னையறியாமல் பக்தி மேலிட்டு பரவசமாயிருந்த நிலை யில் வெளிவந்தவை. இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட இப்பாட்டுகள் யாவும், புராணஙகளிலும், உப நிஷத்துக்களிலும் பிரதிபலிக்கின்றன. அதைக் கீழே காண்போம்.

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியாா்டா்' மூல மாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்த கிரி' திருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறுதவர்கள், தாங்கள் எழுதும் புகாாக்கடிதத தில் மணியார்டர் எண், செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங் களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடாபு கொண் டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத் துழைப்பை யும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியா.

| திருவாய் மொழி | உபநிஷத்துக்கள் |
|---|---|
| உயர்வற உயர் நலமுடையவன் (1-1-1) | ஸ ஏ கோ ப்ரம்மண ஆனநத ஆனந தோப்ரம்ம (தைத்-உப) |
| பயிலும் சுடரொளி மூர்த்தி (3-7-1) | நாராயண பரோஜ்யோதி. (தைத்-உப) |
| பங்கயக் கண்ணனை (3-7-1) | யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவ மக்ஷிணீ (சாந்தோ-உப. 1-6-7) |
| செம்பொன் திருவுடம்பே | ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண (சாந்தோ-உப-1-6-6) |
| சொல்லளவன்று (8-2-6) | யதோ வாசோ நிவர்த்தந்தே (தைத்-உப) |
| என் வல்வினை மாய்நதறச் செய் குந்தன் (7-9-7) | ஸர்வே பாப்மா ந: ப்ரதூயந்தே (சாந்தோ-உப-5-24-3) |
| கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ (7-5-1) | யத்ர நான்யத்பசயதி, நாந்யத சருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா (சாந்தோ-உப-7-24-1) |
| பல பிறப்பாய் (1-3-2) | பஹுதாவிஜாயதே (புருஷஸூக்தம) |
| உண்ணும சோறு பருகும நீர் தினனும் வெறறிலையுமெல்லாம கண்ணனெம்பெருமான (6-7-1) | வாசுதேவ: ஸர்வமிதி (பகவத் கீதை) |
| யாவையும் யவருமதானாய் அவரவா சமயந்தோறும தோய்விலன (3-11-10) | ஏகஸததா ஸர்வபூதாநத ராத்மா நலிப்யதே லோக துக்கேந பாஹ்ய (கடோ-உப-2-5,11). |
| ஆருயிரேயோ (8-1-5) | ப்ராணஸ்யப்ராண: (கேநோப-1--) |
| இனிப்பிறவியான வேண்டேன் | வித்துமாபிகாம் (சாந்தோ-8-14-1) |
| ஏகமாய் நிலங்கீண்ட | தாம் வராஹோா பூத்வாஹரத் (தைத்-ஸம்). |



# செந்தமிழும் சிவஞான முனிவரும்

'பூரண ஞானம பொலிநத நன்னாடு' என நம் பாரத நாட்டைப் பாரதியாா சிறப்பிததுப் பேசுவாா. உலகில வாழ்வியல், இறையியல பற்றிய தததுவங்களின் ஆராய்சசி முதன முதலாக நம நாட்டிலதான தொடங்கபபட்டதென்பதற்கு ஏராளமான சானறுகள உள்ளன. மேலை நாடுகளிலெல்லாம் பினனூட்களிலேயேதான் தததுவ ஆராயசசி தொடஙகப்பட்டது. ஆனால நம் நாட்டில வரலாற்றுக்கெட்டாத காலம முதலே இம்முயற்சி மேறகொள்ளப்பட்டது. மேலை நாடுகளில் தததுவ ஆராய்சசி வேறாகவும, நடைமுறை வாழ்ககை வேறாகவும இருக்க, நம் நாட்டில் தத்துவமும வாழ்வியலும் வேறுபடுத்த முடியாத அளவுக்கு பின்னிப் பிணைந்து கிடக்கின்றன.

நம் நாட்டில் கணக்கில்லாத தத்துவ வித்தகாகள் தோன்றி நீணட ஆராய்ச்சிக்குப் பின்னர் பல்வேறு உணமைகளை மக்களுககு மொழிநதுளளார்கள். நம் தமிழகததிலும் இது போலவே அனேக அருளாளர்கள் தோனறி தாம கணட உண்மைகளை மககளுககு எடுத்துரைத் திருக்கிறார்கள். அவாகள் வரிசையில் பிற்காலததில தோனறிய பெரியோர்களுள் ஒருவரே சிவஞான முனிவராவர். தமது ஆராயச்சித் திறனாலும், நுணணறிவினாலும பல தததுவ நூலகளையும, இலககியச செலவங்களையும தமிழில் யாத்து தமிழுககுப் பெருமை சோநத சிறபபு அவருககே உரியதாகும்.

திககெலாம புகழும திருநெலவேலிச சீமையைச் சேர்நத பாவநாசம் எனனும் புண்ணிய பூமிக்கருகே உளள விக்கிரம சிங்கபுரம எனனும சிற்றூரில சுமாா இருநூறு ஆணடுகளுக்கு முன்னால் ஆனநதக் கூத்தர் என்பாரும அவரது திருமனைவியார் மயிலம்மை என்பாரும் செய்த முன்னைத தவப்பயனாய் அவர்களுக்கு மகவாக சிவஞான முனிவர் தோன்றினார். அவரது பிள்ளைத் திருநாமம் முககளாலிங்கர் என்பதாகும் முக்களா லிஙகரது முனனோர்கள தமிழ்ப் பற்றும், சிவப் பற்றும் நிறைந்த சான்றோர்களாய்த் திகழ்நதார்கள்

முககளாலிங்கருக்கு ஐந்து வயதாக இருந்தபொழுது ஒரு நாள் தெருவிலே விளையாடிக் கொண்டிருந்த பொழுது திருவாவடுதுறை ஆதீனத்தைச் சோந்த சில முனிவர்கள் அவ்வழியே வநது கொணடிருநதார்கள். அநத அருளாளர்களைக் கணட முக்களாலிங்கர் பெரிதும் கவரப்பட்டு அவர்களைத் தம் இல்லம் வந்து உணவருந்திச் செல்லுமாறு கேட்டுக கொணடாா. அநதச் சிறுவனின அன்பான அழைபபிற்கிணங்கி அவர்கள் அவனது இல்லம் சென்று உணவருந்தி மகிழ்நதார்கள்.

அப்பொழுது முக்களாலிங்கரது தந்தையார் வெளியே சென்றிருந்தாா. வெளியே சென்றுவிட்டு வீடு திரும்பிய ஆனந்தக கூத்தர் நடநததை யறிந்து பெரிதும் மகிழ்ந்து தமது அருமைத் திருமகனுடன் அம் முனிவர்கள தஙகியிருநத மடததுககுச் சென்று அவர்களை வணங்கினாா. அப்பொழுது முக்களாலிங்கா தாம துறவு பூண விரும்புவதாகவும் அமமுனிவர்கள உடன் செல்ல அனுமதிககு மாறும கேட்டு தநதையாரை வணங்கினாா. ஆனநதக கூததரும அதறகிணஙகி, பிரியா விடைபெற்று இல்லம் ஏகினாா. பின்னர் முக்களாலிங்கா முனிவர்களுடன் குசீந்திரம் சென்றார்.

திருவாவடுதுறைககுச் சொந்தமான ஒரு மடம் சுசீந்திரத்தில் அப்பொழுது இருந்தது. அம்மடத்திலிருந்த இளையபட்டம் வேலப்ப தேசிகர் எனபவரிடம் முக்களாலிங்கரை அழைத்துச் சென்று, அவரது விருபபத்தைத் தெரிவித்தாாகள். முககளாலிஙகரின் தோற்றத்தையும், அவருககுத் துறவின மீதிருந்த நாட்டததையும் கணட வேலப்ப தேசிகர் அவருககுத் தத்துவ நூல்களை ஓதுவித்துவிசேட சமய தீட்சைகளையெல்லாம் செய்து காவியுடை வழங்கி அனுக்கிரகம செய்தார். அதன் பின்னர் ஒழுக்கச் சீலரான முக்களாலிங்கருக்கு சிவஞானம் என்னும் தீட்சா நாமம் வழங்கினார். அன்று முதல் இவர் சிவஞான முனிவரென்றே அழைக்கப்பட்டார். பின்னர் அங்கிருந்து பல்வேறு சிவததலங்களைத் தரிசித்துத திருவாவடுதுறையை அடைந்தார்.

திரு. கி. அரங்கசாமி, எம ஏ.,
பட்டாம்பி.

திருவாவடுதுறையில் தஙகியிருக்கும்பொழுது சிவஞான முனிவர் ஒரு முறை காஞ்சிககுச சென்றார். அப்பொழுது வேத சிவாகமங்களை ஓதி உணர வேணடுமெனற வேட்கை எழவே, அங்கிருநத தக்க பெரியோர்களிடம அவற்றையெல்லாம் ஐயந்திரிபறக் கற்றுணாநதாா. தாம் கற்றறிந்த நூல்களிலே சொல்லப்பட்டக் கருத்துககளை யெல்லாம் மனத்துட் கொணடு சிவஞான போதத்துக்குச் சிற்றுரையும, பேருரையும எழுதி முடித்தாா.

திருவாவடுதுறை வநது, அங்கு மகா சன்னிதானத்தின முன்னிலையில, தாம் திருவருள் துணையினால் எழுதிய சிவஞானபோதப் பேருரையை அரங்கேற்றினாா. அன்று

## தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

காலை வெள்ளிக்கிழமைகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜித கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தருக்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்தரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

முதல் இவர் மாபாடியச் சிவஞான யோகிகள் என எல்லோராலும் அழைக்கப்பட்டார். பாஷ்யம் என்ற வட சொல்லே பாடியம் எனத் தமிழில் வழங்குகிறது. இவர் எழுதிய பாடியம் திராவிடமாபாடியம் என்றும் அழைக்கப்படுகிறது.

சிவஞான போதத்தின் மங்கல வாழ்த்துப் பாடலுக்குப் பொருள் எழுதிய பெரியோர்களெல்லாம் கல்லால மர நிழலில் மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான் அருளுதற் பொருட்டுப் பொல்லாப் பிள்ளையாரின் பாதங்களைப்பெரியோர் அணியாகக்கொள்வர் என்றே எழுதிச் சென்றுள்ளனர்.

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

இப்பாடலுக்குச் சிவஞான முனிவர் இதனுள் வரும் மலைவில்லார் என்பதற்கான உரையை மலையை வில்லாகவுடையவர் என்று எழுதாமல் மலைவை இன்மையாகச் செய்தார் என்று எழுதுவார். அதாவது மலைவின்மையே சிவம் என்னும் செம்பொருளின் பண்பு என எழுதுவார். இதிலிருந்து அவரது ஆராய்ச்சி பிறரது கோணத்திலிருந்து எவ்வளவு தூரம் வேறுபடுகிறதென்பது தெளிவாகும்.

புறம், புறப்புறம், அகம், அகப்புறம் எனப் பிற சித்தாந்தங்களை வகைப்படுத்திச்சித்தாந்த சைவத்திற்கும், பிற சித்தாந்தங்களுக்குமுள்ள வேறுபாட்டை வெகு நுட்பமாக அவர் எடுத்துரைத்திருப்பது அவரது நுண்மாண் நுழைபுலத்திற்குச் சிறந்த தோர் சான்றாகும்.

உள்ளது போகாது, இல்லது வாராது என்பது நம் நாட்டில் வழங்கும் ஒரு பழஞ்சொல. இதனைச் சற்காரிய வாதம் என தத்துவ ஞானிகள் விளிப்பர். சைவ சித்தாந்தத்தின் அடிப்படையே இவ்வாதத்தை

முதலாகக் கொண்டுதான் அமைக்கப் பட்டிருக்கிறது. சிவஞான மாபாடிய உரையும் இவ்வாதத்தின் அடிப்படையிலேதான அமைக்கப்பட்டிருக்கிறது. தற்கால விஞ்ஞானிகளகூட இந்த அடிப்படைத் தத்துவத்தை ஏற்றுக கொண்டிருக்கிறார்கள்.

எழுத்துகள் உயிர், மெய் என இரண்டாயினும், அவற்றுள் முதலில் தோன்றும் அகரமானது அங்காத்தலால் இயல்பாகவே தோன்றும். அத்துடன் பிற எழுத்துக்களுடன் கூடி நின்று அவற்றைச் செலுத்தும் பண்பும் அதற்கேயுரியது. காணப்படும் உலகம் அறிவுள்ள உயிர்கள், அறிவில்லாத சடப்பொருட்கள் எனபவற்றால் ஆனது. உயிர்கள் தாமே அறியும் ஆற்றல் உடையவைகள் அல்ல. எனினும் அறிவிக்க அறியும் வலியுடையன. ஆதலால் உயிர்களையும், பிற பொருட்களையும் அறிவிக்கவும், தொழிற்படுத்தவும் முற்றுணர்வுடைய ஒருவன் வேண்டும். அவன் ஞான வடிவாய் எல்லாவற்றிலும் கலந்து புலப்படாது நிற்கின்றான் என்பது சைவசமயக்கொள்கை. இந்த உண்மையை வேதாந்த சாத்திரங்களினாலும், தமது பேரறிவினாலும், அநுபவ உண்மைகளாலும் மிகச் சிறப்பாக நிறுவியிருப்பதை சிவஞான மாபாடியம் படிப்போர் தெள்ளிதின் உணர்வர்.

சிவஞான முனிவர் மாபாடியத்தில் வடமொழிச் சொற்களைக் கூடிய மட்டும் தவிர்த்திருக்கிறார். வட நூலார் சாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி, துரியம், துரியாதீதம் என்று ஐந்தவத்தைகளைக் குறிப்பிடும்பொழுது இவர் அதனை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என மொழி பெயர்த்திருப்பது நம் சிந்தைக்கு விருந்தாய் அமைகிறது. மாபாடியம் எழுதப் புதுவார்க்குச் சிறந்ததோர் உதாரணமாகவும் திகழ்கிறது. சைவத்தின் பெருமையினையும், நுட்பங்களையும் எடுத்தியம்பும் மிகச் சிறந்த நூல்களுள் ஒன்றாக இது திகழ்கிறது.

சிவஞான முனிவரின் பிற இலக்கியப் பணிகள் பற்றிப் பார்ப்போமானால் இவர் தொடாத துறையில்லை, தொட்டதைத் துலங்க வைக்காமல் விட்டதும் இல்லை என்பதைக் காணலாம். அந்தாதி, பிள்ளைத் தமிழ், இலக்கண நூல்கள், தருக்க நூல், சமய நூல் எனப் பலவகைப்பட்ட இலக்கியத் துறைகளிலும் இவர் பல நூல்களையும் எழுதியுள்ளார்.

பஞ்சாக்கர தேசிகர் மாலை, கச்சி ஆநந்த ருத்திரேசர் பதிகம், கம்பராமாயண முதற் செய்யுள், சங்கோத்தர விருத்தி, கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ், கலசைப் பதிற்றுப் பத்தந்தாதி, காஞ்சிப் புராண முதற்காண்டம், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், குளத்தூர் பதிற்றுப்பத்தந்தாதி, செப்பறைப்பதி இராசை அகிலாண்டேஸ்வரி பதிகம், சோமேசர் முதுமொழி வெண்பா, திருத்தொண்டர் திருநாமக் கோவை, திருமுல்லை வாயிலந்தாதி, திருவேகம் பரந்தாதி, திருவேகம் பரானந்தக் களிப்பு முதலிய இலக்கியங்களும், இலக்கண விளக்கச் சூறாவளி, சங்கர நமச்சிவாயர் நன்னூல் விருத்தியுரைத் திருத்தம், தொல்காப்பியச் சூத்திர விருத்தி போன்ற இலக்கண நூல்களும், அரதத்தாரியர் சுலோக பஞ்சக மொழி பெயர்ப்பு, எடுத்தென்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம், என்னையிப்பவத்தில் என்னுஞ் செய்யுட் சிவசமவாத மறுப்பு, சித்தாந்தப் பிரகாசிகை, சித்தாந்த மரபுக் கண்டன கண்டனம், சிவசமவாத மறுப்பு, சிவஞான சித்திப் பொழிப்புரை, சிவஞான மாபாடியம், சிவஞானபோதச் சிற்றுரை, சிவதத்துவ விவேக விளக்கம் போன்ற சமய நூல்களும் இவரது கை வண்ணத்தினால் ஆனவை.

இவர் அதிகமாகப் பாடியுள்ளது அந்தாதி இலக்கியங்களாகும். ஐந்து அந்தாதி இலக்கியங்கள் இவரால் பாடப்பட்டுள்ளன. இறைவனை மட்டுமே அந்தாதிகளில் பாடு பொருளாக அமைப்பார்கள். சில சமயங்களில் திருத்தலமும் பாடு பொருளாக அமைக்கப்படும். இறைவன் மீது திருவேகம் பரந்தாதி என்றாலும், திருத்தலம் பற்றி இரசைப் பதிற்றுப் பத்தந்தாதி, கலசைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருமுல்லை வாயிலந்தாதி, குளத்தூர் பதிற்றுப் பத்தந்தாதி என்ற வேறு நான்கு நூல்களையும் பாடித் தமிழன்னைக்கு மாலையாகச் சூட்டியுள்ளார்.

இவரது இலக்கியப் பணிகளின் சிகரமாக விளங்குவது காஞ்சிப் புராண முதற்காண்டம் என்னும் நூலாகும். இந்நூல் சித்தாந்தக் கருத்துக்களின் பெட்டகமாகவும், நாடு, நகர் வருணனைகளுடன் ஒரு காப்பியத்திற்கு வேண்டிய எல்லா இலக்கணங்களையும்தன்னுட்கொண்டு தனிப்பெரும் நூலாகத் திகழ்கிறது. அதனுடன் அணிகள், உவமைகள், தொடை நயம், எதுகை மோனைகள் இன்ன பிற அழகுகளையெல்லாம் கொண்டதாய் படிப்பார்க்கு இன்பம் பயக்கிறது.

சிவஞான முனிவர் தமிழுக்கும், இலக்கியத்திற்கும், தத்துவத்திற்கும் சிறப்பாகப் பணியாற்றிய பேரறிஞர். திரு. வி. க. அவர்கள் சொன்னது போல் "சிவஞான முனிவர் வடமொழிக் கடலையும், தென்மொழிக் கடலையும் உண்ட பெருங்கொண்டல் (மேகம்). அக்கொண்டல் பொழிந்த மழையின் தேக்கம் சிவஞான பாடியம். சிவஞான முனிவரது தத்துவ ஆராய்ச்சி நுட்பத்தை நோக்கும் பொழுது நீலகண்டரும், சங்கரரும், இராமாநுசரும், மத்துவரும் ஓர் உருக்கொண்டு சிவஞான முனிவராக வந்தனரோ?' என்றும், 'அவர் தம் தமிழ் நடையை நோக்கும் பொழுது நக்கீரரும், இளம்பூரணரும், பரிமேலழகரும், நச்சினார்க்கினியரும் ஓர் உருக்கொண்டு அவராகப் போந்தனரோ?" என்றும் கருதுதற்கு இடம் உண்டாகிறது.

மேற்காட்டிய புகழுரை முற்றும் பொருத்தமானதுதான் எனினும் ஏனோ அவரது புகழ் மக்களிடையே பரவாமல் இருக்கிறதென்று நான் சொல்ல வேண்டும். இந்நிலையை மாற்றி சாதாரண மக்களகூட அவரது அருமை பெருமைகளை அறியும்படி செய்ய வேண்டியது அறிஞர் தம் கடமையாகும்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தானமும் சிறந்தது இல்லை அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினைச் செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்டரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பீ. எம். கைதான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம். ஆர். சாபரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராமநாத கோயங்கா — சேர்மேன், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைக் குழு — ரூ. 10 இலட்சம்.
10. திரு. கபில மெஹ்ரா — பம்பாய் — ரூ. 5 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு:

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

செயலாட்சித்தலைவர்

சித்தர்கள் என்றால் சித்திபெற்றவர்கள் என்பது பொருள். அதாவது பேறு, வீட்டின்பம் முதலானவைகளைப் பெற்றவர்கள். பரம்பொருளைக் காண முயல்கின்றவர்களை பக்தர்கள் எனவும் தெளிந்தவர்களை சித்தர்கள் எனவும் சைவத்திருமுறை கூறும்.

திருமூலர், நால்வர், கருவூர்ச் சித்தர், போகர், திருமாளிகைத்தேவர், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள், குகை நமச்சிவாயர், குரு நமச்சிவாயர், மெய்கண்டார், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர் முதலானோர் சித்தர்களின் வரிசையில் வந்தவர்களே ஆவர்.

# சித்தர்கள்

எண்வகை சித்தி :

அணுவைப் போலச் சிறிதாதல் (அணிமா), மேருவைப் போலப் பெரிதாதல் (மகிமா), காற்றுப் போல் இலேசாதல் (இலகுமா), பொன் போலப் பளுவாதல் (கரிமா), எல்லாவற்றையும் ஆளுதல் (பிராப்தி), எல்லோரையும் வசப்படுத்துதல் (வசித்துவம்), கூடுவிட்டு கூடு பாய்தல் (பிரகாமியம்) விரும்பியதனையெல்லாம் செய்து முடித்து அனுபவித்தல் (ஈசத்துவம்) என்ற எட்டுவகைப் பெரும் பேறுகளை அட்டமா சித்தி என்றும் பகர்வர்.

சித்தியின் நிலை .

வாசி என்ற மூச்சுக் காற்றினை அடக்கியும், யோக சகதியினால் உடலில் உள்ள மூலாதாரம், கொப்பூழ், இதயம், இரப்பையின் நடு, கழுத்து, தலை என்ற ஆறு இடங்களிலும் மனத்தை முறையாக நாட்டிக் குண்டலினி சக்தியை எழுப்பிப் பல அனுபவமும் வெற்றியும் கண்டு, அப்பால் உள்ள எல்லாம் ஆன பொருளில் நிலைத்துச் சித்தி பெறுபவரே சித்தர்கள் ஆவர்.

அட்டசித்திகளைப் பெற்றவர்கள் :

1. அகத்தியர், 2. யோகர், 3. கோரக்கர், 4. கைலாசநாதர், 5. சட்டைமுனி, 6. திருமூலர், 7. நந்தி 8. கூன்கண்ணர், 9. கொங்கணர், 10. மச்சமுனி, 11, வாசமுனி, 12. கூர்மமுனி, 13. கமலமுனி, 14. இடைக்காடர், 15. புண்ணாக்கீசர், 16. அந்தரானந்தர், 17. உரோமரிஷி, 18. பிரமமுனி.

சித்தர்களும் வைத்தியமும் :

சித்தர்கள் யோகப் பயிற்சிகளிலும் மருத்துவத்திலும் தலைசிறந்தவர்கள். அகத்தியர், தன்வந்திரி, புலஸ்தியா, புகண்டர், கருவூரார், நாமதேவர், தேரையர், கபிலர், திருமூலர், போகர், முக்காட்டுச்சித்தர் முதலாயினோர் சிறந்தவர்கள்.

அகத்தியரும், நந்தி தேவரும் எழுதிய வைத்திய நூல்கள் பலவனவாகும். திருமூலர் அருளிய திருமந்திரம் நூலில் வைத்தியக் குறிப்பு தெள்ளத் தெளிவாக உள்ளது. காலங்கநாதருடைய சீடர் போகர் என்பவர் மருந்துச் செடிகளுக்காக ரோமாபுரி வரை சென்றதாகவும், பழனியில் ஸ்ரீமுருகப்பெருமானை (தண்டாயுதபாணி) நவபாஷாணத்தால் உருவாக்கியதும், போகரே அத்திருவுருவத்தின் கீழ் சமாதி கூடியதும், போகர் 7,000, யோகம் 700 என்ற நூல்களை இயற்றினார் என்பதும் சிறப்புடைய செய்திகளாகும்.

வடநாட்டில் 84 சித்தர்கள் இருந்ததாகச் சொல்கிறார்கள். இவர்கள் பயின்ற யோக மார்க்கத்தை நாத மார்க்கம் என்பார்கள். இவர்களுடைய சமாதிகள் நேப்பாளத்திலும் பஞ்சாபிலும், வடமேற்கு எல்லைப் புறங்களிலும் காணப்படுகின்றன. இங்குள்ள மக்கள் இவர்களைக் கடவுளர்களாக மதித்து வணங்கி வருகின்றார்கள்.

சித்தர்கள் அருளிய நூல்கள் :

1) ஆனந்த கர்த்தமம், 2) வைத்திய தீபிகா (1, 2—கிரந்தலிபியில்)
தமிழில் உள்ள ஏடுகள்: 3) அகஸ்தியர் வைத்தியம் — ஏமதத்துவம் 800, 4) வைத்திய சாஸ்திரம் 300, (5) உரோமரிஷி சூத்திர வைத்தியம், 6) வேகியமுறை அகஸ்தியர் வைத்தியம், 7) விஷக்கடி வைததியம் 8) அகஸ்தியர் மூலிகை சாஸ்திரம், 9) வைத்திய சாஸ்திர செய்முறைகள், 10) பதார்த்த குண விளக்க சார சங்கிரகம், 11) சௌக்கிய நூல் சுருக்கம், 12) நீர்திறக்குறி, நெய்க்குறி சாஸ்திரம், 13) புளிப்பாணி

திரு. க. நாராயணசுவாமி M.A., B Ed.
திருவாவடுதுறை

வைத்தியம் 500, 14) வைத்திய காவியம் 1000, 15) யூகிமுனி 1200, 16) திருமூலர் வைத்திய காவியம் 1000 17) சட்டமுனி வாதகாவியம் 18) திருவள்ளுவர் கற்பம், 19) நவரத்ன வைத்திய சிந்தாமணி, 20) தேரையர் வைத்தியம், 21) குணவாகடம், 22) அனுபோக வைத்திய பிரம்ம ரகசியம். மேலும் எண்ணற்ற நூல்கள் தமிழிலும், சமஸ்கிருதத்திலும், தெலுங்கிலும் மிக நுண்ணிய வைத்திய முறைகள் ஏராளமாக உள்ளன.

இத்தகைய சிறந்த அருளாளர்கள் மக்களை நல்வழிப்படுத்த தாமே ஒவ்வொரு திவ்ய க்ஷேத்திரத்திலும் ஜீவ சமாதி கொண்டு தெய்வத்திருமேனிகளின் வாயிலாக இகபர சௌபாக்கியத்தை அருளி வருகின்றார்கள் என்பது இன்று வரை கண்டு வருகின்றோம்.



# திருமலையில் தங்கு வசதிகள்

முன் கூட்டியே பதிவு செய்து கொள்ள, தேவையான பணத்திற்கான மணியார்டர் ரசீது அல்லது டிமாண்ட் டிராப்டு ஒன்றினை "உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504" எனும் முகவரிக்கு ஆங்கில விண்ணப்பத்துடன் அனுப்பவும். 20 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்பியத்தொகை, தங்கும் தேதி, தங்கும் நபர்கள் ஆகிய விவரங்களை அனுப்புதல் வேண்டும்.

மேஜை, நாற்காலி, படுக்கை வசதிகளுடன் கூடிய கீழ்வரும் தங்கு வசதிகள் உள்ளன.

I. ஹில் வ்யூ சொகுசு அறைத தொகுதிகள், சங்குமிட்டா, சேஷாத்ரி, அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்.

| | |
|---|---|
| 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 25/- |
| எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதி பெரிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 50/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதி சிறிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 25/- |

இந்த இடங்களுக்கு முன்கூட்டியே இடவசதிக்கான முன்பதிவு செய்து கொள்ளலாம்.

II. மங்களாபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை மற்றும ஆழ்வார் ஏரி குடில்கள் டி. பி. வெளிப்புற குடில்கள்.

| | |
|---|---|
| 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 20/- |
| 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | ரூ. 70/- |
| எம். பி. சி 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 20/- |
| எம்.பி.சி. 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 12/- |
| டி.பி., ஏ.டி.சி., அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி உள்ளது) | ரூ. 15- |
| டி.பி., ஏ.டி.சி. அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி இல்லாதது) | ரூ. 10/- |

ஏ.டி.சி. கீழ்த்தளம் முதல் வரிசை

| | |
|---|---|
| 'ஏ' பகுதி | ரூ. 30/- |
| 'பி' பகுதி | ரூ. 30/- |

ஆர்ஜித சேவை கிருஹஸ்தர்கள் மட்டுமே இத்தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்து கொள்ளலாம்.

| | |
|---|---|
| III. எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதிகளில் தனி அறைத் தொகுதி | ரூ. 50/- |
| எஸ்.வி. விருந்தினர் விடுதியில் மூலை அறைத் தொகுதி | ரூ. 60/- |
| எஸ்.வி. விருந்தினர் விடுதியில் பெரிய அறைத்தொகுதி | ரூ. 70/- |
| IV. பிரயாணிகள் மாளிகையில் உட்குடில்கள் | ரூ. 70/- |
| சிறப்பு அமைப்புக் குடில்கள் | ரூ. 100/- |
| எச்.ஆர்.ஜி. குடில்கள் | ரூ. 250/- |

முன் பதிவு செய்தல் முடியாது. கிடைக்கும் காலி இடங்களைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

| | |
|---|---|
| V. ஹில் வ்யூ சொகுசு குடிலில் உள்ள மோடிபவன் (நான்கு அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும் | ரூ. 250/- |
| ஸ்ரீநிகேதன் விருந்தினர் விடுதி ஒவ்வொன்றும் | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 750/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஒவ்வொரு அறைத் தொகுதியும்) | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 1000/- |
| பால குடீரம்-ஒவ்வொரு அறைத்தொகுதியும் | ரூ. 250/- |
| அறைத்தொகுதி முழுவதும் | ரூ. 1500/- |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி ஓர் அறைத் தொகுதி | ரூ. 250/- |
| அடித்தளத்திலும் முதல் தளத்திலும் உள்ள பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் | ரூ. 750/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 2500/- |
| கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதன வசதி உள்ளது) | ரூ. 500/- |

முன்பதிவு வசதி கிடையாது. வேண்டுகோளுக்கிணங்க காலி இடங்களைப் பொறுத்து வழங்கப்படும்.

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி.தே. திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

VI. திருமணக் கூடங்கள்:

| | |
|---|---|
| சங்குமிட்டா குடில்கள் கிழக்கு எண். 260, 266, 267, 272. | ரூ 75/- |
| டி.பி. குடில்கள் எண். 71 வரிசை III எண்கள் 136 மற்றும் 152 | ரூ. 75/- |
| ரூயா குடில்/கோகினேனி குடில் மற்றும் ஏ.டி.சி. எண். 99 | ரூ. 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | ரூ. 125/- |
| பால்ஜி திருமண மண்டபம் | ரூ. 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | ரூ. 1000/- |

முன் பதிவுக்கு, 'இணை செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

தள்ளினாலும், அக்குழநதை தாயை ஒழிய வேறு கதியில்லை என்றறிந்து அவளுடைய காலையே கட்டிக் கொண்டு அழுவது போல் மாறி மாறிப் பல பிறப்பும் பிறக்கும்படி எனக்கு நீ துன்பத்தைக் கொடுத்தாலும் உன திருவடியைக் கட்டிக் கொண்டு விலகமாட்டேன்' என்று கூறும் பாடலிலும்,

"கண்டா ரிகழ்வனவே காதலன் தான்
செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக்
குலமகள் போல
விண்டோய் மதிளபுடைசூழ்
வித்துவக்கோட்டம்மானே நீ.
கொண்டாளாயாகிலும் உன்குறை
கழலே கூறுவனே"

'நற்குலத்திலே பிறநத நஙகை யொருத்திக்கு தன் நாயகன எவவளவு கொடுமையைச் செய்தாலும் அவன் காலடியிலேயே அவள் விழுந்து கிடப்பது போல் வித்துவக் கோட்டம்மானே! என்னை நீ ஒதுக்கித் தள்ளினாலும் உன்னைத் தவிர எனக்கு வேறு புகலிடம இலலை' எனற பாசுரத்திலும் இவர் கூறும உவமை நயம் கற்பவர் உள்ளத்தைக் கரைந்துருகச் செய்யும்.

இவர் இராமாவதாரத்திலும், கிருஷ்ணாவதாரத்திலும் ஊறித்திளைப்பர். இவர் இராமாவதாரத்தில ஈடுபட்டு, இராமன் வனம் சென்றதைப் பொறுக்காத தயரதன புலமபலாக,

"கொலலணைவேல வரிநெடுஙகண
கோசலை தன
குலமதலாய்' குனிவில லேநதும
மலலணைநத வரைததோளா'
வலவினையேன்
மனமுருக்கும வகையே கறறாய்
மெலலணைமேல முனறுயின்றாய்
இனறினிப்போய்
வியனகான மரத்தின் நீழல
கல்லணைமேல் கணடுயிலக
கற்றனையோ?
காகுத்தா கரிய கோவே!"

'காகுத்தா! கரிய கோவே! இன்று வரை மெல்லணை படுத்திருந்த நீ, கானகத்தில் கல்லணை மேல் கணடுயிலக் கற்றனையோ?' என்று சோக ரசம் ததும்பப் பாடும பாடலைக் கேட்பவர் உள்ளத்தை அனலிலிட்ட மெழுகென உருகச் செய்து விடும்.

கார்மேக வணணனான கண்ணனின் லீலைகளில் ஈடுபட்டு அகங்குழைநது மனம மகிழ்நது இவர் பாடுவா. ஒருததி மகனாய பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளரும் கண்ணபிரானின் குழந்தைப் பருவத் திருவிளையாடல்களைக் கண்டு களித்த யசோதையின் பேறு கண்டு இரங்கும் தேவகிப் பிராட்டியின் புலம்பலாக,

"முழுதும் வெண்ணெயளைந்து
தொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்
தாமரைக்கையும்
எழிலகொள் தாம்பு கொண்டடிப்
பதற்கு எள்குநிலையும் வெண்தயிர்
தோயந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சிநோக்கும் அந்
நோககும அணிகொள் செஞ்சிறு
வாய் நெளிப்பதும்
தொழுகையும் இவைகண்ட அசோதை
தொலலையின்பத்திறுதிகண்டாளே"

'கணணன் வெணணெயும் தயிரும் களவு செயது உண்ணும போது யசோதை கணடு கமபும கயிறும் எடுத்து வர, வாயிலுள்ள வெண்ணெயைத் துடைத்துக்கொள்ள ஆரம்பித்து வாய் முழுதும் பூசிக்கொள்வன. பிறகு யசோதையால் அடிபட்டு அழுவன; பயந்தவனைப் போல் விழிப்பன்; வாயதுடிக்க விக்கி விக்கி அழுவன், கடைசியாக கையைக் கூப்பிக்



மாத்தூர் கோவில்.

வி. முத்துராமன் - கோவை.



அலங்கரிக்கப்பட்ட யானையின் மீது உலாவரும் திருபகவதி அம்மன் திருக்கோலம் - நெம்மாரா - கேரள மாநிலம். — கோவை சிதாராம்.

கும்பிடுவன்: அவனது இந்த விளையாட்டுக்களையெல்லாம் கண்டு ஆனந்தத்தின் எல்லையிலே நின்று அனுபவிக்கும் பேறு யசோதைக்குக் கிடைக்கப் பெற்றதே! சுமந்து பெற்ற எனக்குக் கிடைக்காமற் போயிற்றே' என்று வருந்தும் தேவகிப் பிராட்டியின் புலம்பலாகப் பாடும் பாடல் கல்நெஞ்சு கொண்டவரையும் கரைந்துருகச் செய்யும்.

ஆயர்பாடியிலே இளங்காளைப் பருவத்தில் கண்ணன் விளையாடிய ஒரு நிகழ்ச்சியாக,

"கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக்
கடைக்கணித்து ஆங்கேயொருத்தி
தன்பால்
மருவி மனம் வைத்து மற்றொருத்திக்
குரைத்து ஒரு பேதைக்குப்
பொய்குறித்துப்
புரிகுழல் மங்கை யொருத்திதனைப
புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை
மருதிறுத்தாய் உன்வளர்த்தியூடே
வளர்கின்றதால் உன்றன்
மாயை தானே"

'மலர் சூடிய கருங்குழலாள் ஒருத்தியைக் கடைக்கண்ணால் நோக்கி, வேறொருத்தி பக்கல் மனம் செல்ல, மற்றொருத்தி பால் நான் உனக்கு அடிமை என்று சொல்லி, அவளையும் விட்டு பின்னொருத்திக்கு நீ, இன்ன இடத்தில் போய் நில், நான் அங்கே வருகிறேன் என்று ஒரு பொய் பேசி யாவரும் உன்னை நம்பி மோசம் போகும்படி வஞ்சித்துத் துடிக்கவிட்டு இன்னொருத்திபிடம் இன்பம் நுகர்ந்தாய்! அதுவாகிலும் மெய்தானோ என்று பார்த்தால் அவளுக்கும் மெய்யனல்லை. கண்ணா! இளமை வளர வளர உன் மாயையும் கூடவே வளர்கின்றதே? என்னே! உன் திருவிளையாடல்?' என்னும் கன்னித் தமிழின் இன்னிசைப் பாடல் களிபேருவகையூட்டும்.

"என்னை வருகவெனக் குறித்திட்டு
இனமலர் முல்லையின் பந்தர் நீழல்
மன்னியவளைப் புணரப் புக்கு மற்
றென்னைக் கண்டு உழறு நெகிழ்ந்தாய்
பொன்னிறவாடையைக் கையில்
தாங்கிப் பொய்யச்சங்காட்டி நீ
போதியேலும்
இன்னம் என்கையகத்து ஈங்கொரு
நாள் வருதியேல் என் சினம்
தீர்வன் நானே"

'கண்ணபிரான், பெண்ணொருத்தியை இன்ன இடத்திற்கு நீ வா என்று கூறிவிட்டு, முல்லைப்பந்தலின் பதுங்கி நிற்கும் மற்றொருத்தியை அணைக்க, அவனைப் பின்தொடர்ந்து வந்த அப்பெண் அவனது கள்ளத்தனத்தைக் கண்டுகொள்ள, அவனும் அவளுக்குப் பயந்தவன் போலப் பாசாங்கு செய்து ஓடிப்போனான். அவனும், கண்ணா! இன்று பயந்தவன் போல நீ தப்பித்தாலும மற்றொரு நாள் என் கையில் சிக்காமல் போகாய்? அப்போது என் கோபம் தீர உன்னை என்ன செய்கிறேன் பார்?. என்ற கோபிகையின் பேச்சாகக்கூறும ஆழ்வாரின் பாடலைக் கேட்டு மயங்காதாரும் உலகில் உண்டோ?

இவ்வாறு மாலவன் புகழ் பாடிய மன்னவனாகிய குலசேகராழ்வார் வண்ணத்தமிழில் வடித்துத் தந்த பெருமாள் திருமொழிப் பாசுரங்களை நாம் வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து இன்புறுவோமாக. ✽



# நமமாழ்வார் பாடலில் இறை

தலைமை, நடுவுநிலைமை, முதன்மை என்னும் பண்புகளையும் தங்குதல் என்னும தொழிலையும் கூறும இறை என்ற சொல் ஆகுபெயராய் நினறு-தலைவனும், நடுவு நிற்பவனும், முதல்வனும், எங்கும் எபபொழுதும் தங்கியிருப்பவனுமாகிய இறைவனை - கடவுளைக் குறிக்கின்றது. அப்படிப் பட்ட இறைவன் நம்மாழ்வாருடைய பாடல்களில் திருமால் என்று அறியக்கிடக்கினறமை சிறிதே விளக்கப் படுகின்றது.


திரு. டி.ஏ. கிருஷ்ணமாசாரியா
திருப்பதி


**தலைவன**

தலைமையை உடைய கடவுளர் பலர். அவராவார் பிரமன், சிவபெருமான், இந்திரன் முதலியோர். இவர்கள் சிலநாள் இருந்து அதிகாரம் செலுத்திப் பின்பு மறைந்து விடுவராகையால் ஆக்கரான (அநித்யரான) தேவர்கள் எனப்படுவர். இப்படியல்லாமல் வைகுந்தத்தில் திருமகள் நாதனுக்குத் தொண்டு புரிந்து கொணடிருககும் ஆதிசேஷன் கருடன் சேனை முதலியார் தொடக்கமான தேவாகள் எப்போதும அழிவின்றியிருப்பராகையால் நித்யசூரிகள் எனப்படுவர். இவ்விருதிறத்தார்க்கும் திருமாலே தலைவர் என்பது "பேச நினற சிவனுக்கும் பிரமனதனககும் பிறர்ககும் நாயகனவனே" (திருவாய் 4-10-3) என்றும், "அசைவில் அமரர் தலைவர் தலைவா" (திருவாய 5-8-9) எனறும் இவ்வாறு பல இடஙகளிலும் அறியக்கிடக்கின்றது. அசைவில்லாத - அழிவில்லாத அமரர் ஆதிசேடன கருடன முதலியோர், அவர்களுக்குத் தலைவர் சேனை முதலியார், அவர்களுககும் தலைவர் திருமால் என்றவாறு. "உயர்வற உயர் நலம் உடையவன்" (திருவாய் 1-1-1) ளாய் உள்ளான் திருமால் என்று முக்கியமான பெருமையைக் கூறுகிறார்.

**முதல்வன் :**

நம்மையும் நம்மைவிட உயர்ந்த பிரமன முதலிய தேவர்களையும் படைத்தவர் திருமால் என்பது "ஒன்றுந்தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லாவன்று நான்முகன் தன்னொடு தேவர் உலகோடு உயிர் படைத்தான் ... திருககுருகூரதனுள் நின்ற ஆதிப்பிரான்" (திருவாய் 4-10-1) என்றிவை முதலிய பாடல்களால் அறியலாகும். உலகில் உண்டாகும் பொருள்கள் எல்லாவற்றிற்கும் முதற்காரணம் துணைக்காரணம் கருத்தா என்ற இம்மூன்று காரணங்களும் திருமாலே என்று "தான் ஒருருவே தனி வித்தாய்" (திருவாய் 1-5-4) என்ற இத்தொடரால் பெறப் படுகிறது. தானே வித்தாய் - முதற் காரணமாய், தானே ஒருவராய்

என்று - அத்திருமால் மற்ற எல்லோருடைய குணங்களின் உயர்வும் அறும்படியாக மேன் மேல் உயர்ந்து கொண்டே செல்கிற அறிவு ஆனந்தம் அன்பு முதலிய நற்குணங்கள் அமையப் பெற்றவர் என்றும், "உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர் மடமகள் என்றிவர் மூவர்" (திருவாய் 1-9-4) என்றும் "தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்ற மரர் ஆட்செய்வார்" (திருவாய் 8-1-1) என்றும் பகவானையும் அவன் குணங்களையும் அனுபவிப்பதற்கு வைகுந்தத்தில் தேவிமார்களும், தேவினும், தேவிகளுமான சேர்த்தியில் எளிய பணிகளைச் செய்யும் அமரர்களான நித்யசூரிகளும் உண்டென்றும் ஆழ்வார் குறித்தருளுகிறார். இவை எல்லாவற்றையும்விட, "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்று-என்றும் விளங்கும் வேதத்தின்பொரு

துணைககாரணமாய தானே தனியாய-கருத்தாவாய் உள்ளான் வைகுந்தன் என்பது அதன் கருத்து. உலகில் மண் முதலிய முதற்காரணம் குடம் முதலிய காரியத்தை உண்டாக்கும்போது மண்ணின் உருண்டை வடிவம் சிதைந்து விடுவது போல், திருமால் உலகத்தை உண்டாக்கும்போது முதற்காரணமாகிய அவருடைய உருவிற்குச் சிதைவு ஏதும் ஏற்படுவது இல்லை என்பதை "நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலிற் சிதையாமே (திருவாய் 1-5-2) என்றதனுல் அறிகிறோம்.



### நடுவு நிலையுடையவன்

ஒரு பக்கம் சார்தல் என்னும் குற்றம் (பட்சபாதம்) அற்றவன் என்றபடி 'ஈடும் எடுப்பும் இல் ஈசன்' (திருவாய் 1-6-3) என்றதனுல் ஒருவன் பிறவி அறிவு, ஒழுக்கம் முதலியவற்றுல் தாழ்ந்தவனென்று அவனை விட்டிடுதலும், ஒருவன் அவற்றுல் உயர்ந்தவனென்று அவனைத் தேர்ந்து எடுத்துக் கொள்தலுமாகிய குற்றமின்றி எல்லோரும் தன்னை அடைந்து உய்யும்படி நடுவுநிலையுடையவர் திருமால் என்பது புலனுகும்.



போட்டோ: கோவை சீதாராம்.

### எங்கும் தங்கியிருப்பவன

"திடவிசும்பு எரி வளி நீர் நிலம் இவை, மிசை படர் பொருள் முழுவதும் ஆய் (ஆக்கி) அவை யவை தொறும், உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து உளன்" (திருவாய் 1-1-7) என்றும், "எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவற நிறைந்து நின்ற மெய்ஞ் ஞானச சோதிககண்ணன்" (திருவாய் 3-2-7) எனறுமு இங்ஙனே உள்ள பல பாடல்களினுல் திருமால் தங்கியிராத இடம் ஒனறும இல்லையென்றும், "அளவுடை ஐம்புலன்கள் அறியாவகையால் அருவாகி நிற்கும் ......கண்ணனை" (திருவாய் 3-10-10) என்பதனுல் அப்படி எங்கும் எப்போதும் தங்கியிருக்கும் திருமால் யாருடைய புலன்களுக்கும் இலக்காவதில்லையென்றும் நாம் அறியஇயலும். இங்ஙனம் எல்லார்க்குள்ளும் தங்கியிருப்பது அவரவர்களுடைய புண்ய பாபங்களுக்குத் தக்கவாறு அவரவர்களை நல்ல காரியங்களிலும் கெட்ட காரியங்களிலும் தூணடுவதற்காகவே என்பது 'மறுபகலில் ஈசனை' (திருவாய் (4-1-10) "ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த"(திருவாய் 4-3-2)என்றிவை முதலியவற்றில், தூண்டுமவன் என்னும் பொருள்பட "ஈசன" என்ற சொல்லை ஆண்டதனுல் போதரும். "வீற்றிருந்த ஏழுலகும் தனிக்கோல் செல்ல.........ஆற்றல்மிக்கு ஆளும் அம்மான்" (திருவாய் 4-5-1) என்று ஈசன் என்ற சொல்லின் பொருளை வெளிப்படையாகவும் அருளியுள்ளமை காணலாம்.

திருமால் எல்லோர்ககும தலைவா என்பதை, "தீர்த்தனுலகளந்த சேவடிமேல் பூந்தாமம் சேர்த்தி அவையே சிவன்முடிமேல் தான் கண்டு பார்த்தன் தெளிந்தொழிந்த வைந்துழாயான் பெருமை" (திருவாய் 2-8-6) என்று அர்ச்சுனன் தெளிவு கொண்டும், "கண்டும் தெளிந்தும் கற்றூர் கண்ணற்கு ஆளனறி ஆவரோ

[illegible] மார்க்கண் டேயனுக்கு வாழுநாள், இன்னடைச் சடைமுடி ஈசன் உடன் கொண்டு உசா(வ)ச் செல்ல கொண்டங்குத் தன்னோடுங் கொண்டு உடன் சென் றது உணர்ந்துமே"(திருவாய் 7-5-7) என்று சிவபெருமான் மார்க்கண்டே யனுக்கு ஆயுளை, திருமாலிடத்து அழைத்துச் சென்று அருளும்படி செய்தது கொண்டும் விளக்குகிறார் நம்மாழ்வார்.

திருமால் பிற தேவதைகளைத் தோற்றுவித்தார் என்பதனை, "கள்வா எம்மையும் ஏழுலகும், நின்னுள்ளே தோற்றிய இறைவ! என்று, வேள் ளேறன நான்முகன் இந்திரன் வான வர், புள்ளூர்திகழல் பணிந்து ஏத்து வரே" (திருவாய் 2-2-10) என்று சிவ பெருமான் முதலியோரின் வார்த்தை யைக் கொண்டு மூதலிக்கிறார்.

திருமால் நடுவுநிலையுள்ளவர் என் பதை "மழுங்காத வைந்துதிய சக்கர நல்வலத்தையாய் தொழுங்காதற் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றி னையே!" (திருவாய் 3-1-9) என்று ஒரு விலங்கென்று விட்டிடாமல் கஜேந்திராழ்வானுக்கு அருள் செய்த தைக் கூறித் தெளிவிக்கிறார்.

திருமால் எங்கும் தங்கியிருக்கிறார் என்ற உண்மையை "எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து, இங்கில்லையால் என்று இரணியன் தூண்புடைப்ப, அங்கு அப்பொழுதே அவன் வியத்தோன்றிய, என் சிங்கப் பிரான பெருமை ஆராயும் சீர் மைத்தே" (திருவாய் 2-8-9) என்று நரசிங்காவதார கதையைக் கொண்டு நிரூபிக்கிறார்.

"காக்கும் இயல்வினன கண்ண பெருமான்" (திருவாய் 2-8-9)என்று திருமால் தன்னுருவோடு நின்று காப்பதையே இயல்வாகவுடையவர் என்றும், "புரமொரு மூன்றெரித்து அமரர்க்கும் அறிவியந்து அரனய னென உலகழித்து அமைத்துளன்" (திருவாய் 1-1-8) என்று அரனுக்கு உள்ளே [illegible] தல் உலகழித்தல் ஆகிய இவற்றை யும், அயனுக்கு உள்ளே உயிரா யிருந்து அமரர்க்கு அறிவூட்டுதல் உலகைப் படைத்தல் ஆகிய இவற் றையும் செய்வர் என்றும் ஆழ்வார் அருளுகிறார்.

### திருமாலின் ஐந்து நிலைகள்

"விண்மீதிருப்பாய் மலைமேல் நிற் பாய் கடற்சேர்ப்பாய் மண்மீதுழல் வாய் இவற்றுள் எங்கும் மறைந்துறை வாய்" (திருவாய் 6-9-5) என்று திரு மாலின் ஐந்து நிலைகள் ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்டுள்ளன. பரம பதம் எனப்படும் விண்ணின் மீது நித்ய சூரிகளால் தொழப்படும் நிலை. திருப்பாற்கடலில் பிரமன் முதலிய தேவர்க்குக் காட்சி தருவதற்காக அரவணையில் சயனித்திருக்கும் நிலை. அங்ஙனம் காட்சி தந்த பிறகு அவர் களுடைய பகைவரைப் போக்குவ தற்கும் நல்லோரைக் காப்பதற்கும் இவற்றின் வாயிலாக அறநெறியைப் நிலைநிறுத்துவதற்குமாக இம்மண்மீது இராமபிரானாகவும் கண்ணபிரானாக வும் இங்ஙனே பலவாறாகத்தோன்றித் திரிந்து வருந்தும் நிலை. இப்படி யல்லாமல் எல்லார்க்குள்ளும் உயி ராய் மறைந்துறைந்து அவர்களைத் தூண்டும் நிலை. அவதரித்த காலத்தில் பிறந்து அப்பெருமானை நேரே கண்டு மகிழ முடியாமல் பின்பு பிறந்த நாமும் கண்டுவணங்கி ஏத்திப் பயன் பெறுமாறு திருமலை ஸ்ரீரங்கம் திருக் கச்சி முதலிய இடங்களில் சிலை உலோ கம் முதலியவற்றாலான அழகிய திரு மேனிகளில் எழுந்தருளியுள்ள நிலை ஆகிய இவ்வைந்துமே முற்கூறிய பாட்டில் இடம் பெற்ற நிலைக ளாகும்.

நம்மாழ்வாருடைய பாடல்கள் இவ்வைந்து நிலைகளையும் அங்கங்கே தெரியபடுத்துவனவாயினும் திருமலை திருவரங்கம் திருக்கச்சி முதலிய திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார நிலைகளிலேயே அவற் [illegible] ஹிருதயம் என்ற நூல் கூறும். அவற் றுள்ளும்—"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் தெழிகுரலரு வித் திருவேங்கடத் தெழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே" (திருவாய் 3-3-1) என்று திருவேங் கடத்தெம்பெருமானுக்கே அடிமை செய்யப்பார்த்ததையும், அவ்வடிமை என்னும் பெரும்பயனைப் பெற வேண்டி, "திருவேங்கடத்தானே, புக லொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே" (திரு வாய் 6-10-10) என்று அவன் திரு வடிகளையே தஞ்சமாகப் பற்றியதை யும் நோக்கினால் திருவேங்கடத்தில் உள்ள அர்ச்சாமூர்த்தியிலேயே நம் மாழ்வாருக்கு ஈடுபாடு அதிகமென்று தோன்றுகிறது.

திருவாய்மொழி தவிர ஏனைய திரு விருத்தம் திருவாசிரியம் பெரிய திரு வந்தாதி என்ற இம்மூன்று பிரபந்தங் களிலும் — "ஞானப்பிரானையல்லா லில்லை நான் கண்ட நல்லது" என்றும், "ஓராநீலைச் சேர்ந்த எம்பெருமா மாயனையல்லது ஒரு மாதெய்வம் மற் றுடையமோ யாமே" என்றும், "தொல்லைமா வெந்நரகில் சேராமல் காப்பதற்கு (ஈன்துழாய் மாயனை யன்றி) இல்லை காண் மற்றொரிறை" என்றும்ஆழ்வார் அருளியுள்ளதனால் மிக மிக மதித்த இறைவன் திருமாலே அவர் யென்பது தோனறும். ஆகச் சுருக்கமாக "நம்மாழ்வார் பாடலில் இறை" எனபது பற்றி என் சிறறறி விற் கெட்டிய வரையில் எழுதியுள் ளேன். குறறங்குறைகளைப் பெரி யோர் பொறுத்தருளவேண்டுகிறேன்.



# தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

12–6–89 அன்று திருமலையில் கூடிய தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின் வருமாறு :

ஆந்திர மாநில முன்னாள் அறநிலையத்துறை ஆணையர் டாக்டர் ஜே. பாபுரெட்டி அவர்கள் தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழுவின அலுவல் சார்பான உறுப்பினராக நியமிக்கக் குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் வசித்துக் கொண்டும், பணி புரிநதும் வரும் தி.தி.தே. ஊழியர்கள் வாரத்திற்கு ஒரு முறை திருப்பதிக்குச் சென்று வர ஆகும் பேருந்து கட்டணத்தில் மூன்றில் ஒரு பங்கினை தி. தி. தே. ஏற்பதென்று குழு முடிவு செய்துள்ளது. இதனல் சுமாா திருமலையில் சுமார் 2000 ஊழியர்களுக்காக ஆணடொன்றுக்கு ஒதுக்கப்படும்தொகை ரூ. 8,16,000 ஆகும்.

ஃ ஃ ஃ

ஓய்வு பெற்ற தேவஸ்தான ஊழியர் மற்றும் அவருடைய மனைவி அல்லது உதவியாளர் ஆக மொத்தத்தில் இருவருககு வருடத்தில் மூனறு முறை அதாவது பிப்ரவரி, ஜூலை மற்றும் நவம்பர் மாதங்களில் செவ்வாய்க் கிழமைகளில் திருமலைக் கோயிலுக்கு சிறப்பு நுழைவு வழியாகச செல்ல அனுமதிக்கப்படுவர்.

ஃ ஃ ஃ

திருப்பதி மலை அடிவாரத்திலுள்ள காலி கோபுரத்தின் அருகேயும் திருமலை சங்குமிட்டாவிலும் உள்ளது போல் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள சங்கு, சக்கரம், நாமம் அடங்கிய பலகையினைப்போனறு ஆந்திர மாநிலத்தின் சில முககிய மாநகரங்களிலும் அமைப்பதென்று குழு தீர்மானித்துளளது.

ஃ ஃ ஃ

தின ஊதியம், வரையறுக்கப்பட்ட ஊதியம் ஆகிய நிலைகளில் 31-3-84 முதற்கொண்டு பணிபுரியும் ஊதியர்கள் உள்ளிட்ட மற்றைய நிரந்தர ஊழியர்களான சுமார் 8000 தி. தி. தேவஸதான ஊழியர்களுக்கு வண்ணப் புகைப்பட அடையாள அட்டைகளை வழங்குவதற்கான பணியைத் திருப்பதி ரகு புகைப்பட நிறுதனத்தார்க்கு வழங்கவும், அதற்காக ரூ. 1,14,000 ஒதுக்கவும் குழு அனுமதி அளித்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலைக்கோயில் ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமானுக்கு வைரம் மற்றும் உயர்நத ரக கற்கள் பதித்த ‘தோள் பட்டைகள்’ வழங்க புது தில்லியைச சேர்ந்த திரு. ஆர். பி. கோயங்கா அவர்கள் தெரிவித்த விருப்பத்திற்கு தேவஸ்தான மேலாண்மைக் குழு இசைந்துள்ளது. இப்பணிக்கு ரூ. 14 இலட்சம் ஆகும் எனறு எதிர்பார்ககப்படுகின்றது.

★

## சந்தாதாரர்களுக்கு. . . .

31-8-89—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தஙகள் சந்தா எணகளைக கணடிப்பாகக் குறிப்பிடவும். ‘ஆசிரியா’ ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும முகவரியுடன ஆங்கிலத்தில் தொடாபு கொளளவும.

219 224 226 227 351 356 360 364 543 656 675 753 768
1603 2886 2988 3061 3134 3233 3240 3242 3246 3247
3252 3258 3266 3268 3270 3278 3283 3286 3294 3295
3297 3298 4601

இந்திய உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி மாண்புமிகு திரு. ஈ. எஸ். வெங்கடராமய்யா அவர்கள் அணமையில் திருமலைக்குத் தன குடும்பத்துடன வருகை புரிந்து இறைவனைத் தரிசிததார். கோயில முன் தி. தி. தே. செயலாட்சித தலைவா திரு. சிாச். வெங்கடபதி ராஜு அவர்களால் நீதிபதி அவர்கள் வரவேற்கப்பட்டாா.

★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501

